# தமிழ் எழுத்தாளர் யார்—எவர்?
# 1966



தமிழ் எழுத்தாளர் சங்கம், சென்னை
தொகுத்து வெளியிட்டது

தமிழ் எழுத்தாளர் சங்கம்
சென்னை-2

Tamizh Ezhuthalar Yar - Evar ? (Who's Who of Tamil Writers), 1966.
Compiled and Published by Tamil Writers' Association, Madras.2.




First Edition 1966.

விலை ரூ. 3/-

விற்பனை உரிமை :

தமிழ்ப் புத்தகாலயம்

576. பைகிராப்ட்ஸ் ரோடு. சென்னை-5.

ஜீவன் பிரஸ், சென்னை-5. *(1163)*

# முன்னுரை

அமரர் கல்கி அவர்களின் தலைமையின்கீழ்த் துவக்கப் பெற்ற தமிழ் எழுத்தாளர் சங்கம் 17 ஆண்டுகளாக நன் முறையில் இயங்கிவருகிறது. சென்னை நகரிலும், தமிழ்நாட் டின் பல மாவட்டங்களிலும், இந்தியாவின் பிற மாநிலங் களிலும், இலங்கையிலுமுள்ள சுமார் 500 எழுத்தாளர்களை இச் சங்கம் தனது உறுப்பினராகக் கொண்டுள்ளது. ஆண்டு தோறும் சங்கச் சார்பில் நடைபெறும் மாநாட்டில், தமி ழுக்கு அருந்தொண்டாற்றியுள்ள அறிஞர் இருவருக்குப் பாரதியின் திருவுருவம் பொறித்த வெள்ளிக் கேடயங்கள் வழங்கியும், தமிழ் இலக்கியச் செல்வங்களைப் பிறமொழியின ருக்கு நன்முறையில் அறிமுகப்படுத்தியுள்ள இருவருக்குப் பதக்கங்கள் வழங்கியும், பாராட்டிச் சிறப்பித்து வருவதை வழக்கமாகக் கொண்டுள்ளது. மேலும், எழுத்தாளர்களுக் குப் பயன்படும் கருத்தரங்குகளை நடத்தியும், சிறுகதை விழா, நாவல் விழா போன்ற விழாக்கள் எடுத்தும், எழுத்தாளர் நல உரிமைக்கான பிற ஆக்கப்பணிகளில் தொடர்ந்து ஈடு பட்டும் வருகிறது. சொந்தக் கட்டிடம், போதுமான நிதி நிலைமை முதலிய வசதிகள் இருந்தால் எழுத்தாளர் சங்கம் மேலும் பயனுள்ள முறையில் தொண்டாற்ற முடியும். அதற் கான இனிய சூழ்நிலை கடந்த சில ஆண்டுகளாக உருவாகி வருவது மகிழ்ச்சிக்குரியதாகும்.

இன்று தமிழில் இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட எழுத் தாளர்கள் இருக்கின்றனர் என்பதை எழுத்துலகம் நன்கறி யும். இச் சங்கத்தில் உறுப்பினராயிருந்தாலும் இல்லாதிருந் தாலும், இவர்கள் அனைவரைப் பற்றிய விவரங்களையும் தொகுத்து ஒரு நூலாக வெளியிடுவதன் மூலம், பதிப்பாளர், நூலகத்தினர், பத்திரிகையாளர், வாசகர் முதலிய இலக் கியத் தொடர்புள்ள அனைவரும் எழுத்தாளர்களைப் பற்றிய தகவல்களை ஓரளவாவது தெரிந்துகொள்ளவும், பல இடங் களிலும் பரவியுள்ள எழுத்தாளர்கள் ஒருவருடன் ஒருவர் தொடர்பு கொள்ளவும் உறுதுணை புரிவதாயிருக்கும் என்று இச் சங்கச் செயற்குழு நெடுநாளாகக் கருதி வந்தது.

குழந்தைகளுக்காக எழுதும் 201 எழுத்தாளர்களைப் பற்றிய விவரங்கள் அடங்கிய ‘குழந்தை எழுத்தாளர் யார்

எவர்?' என்னும் தொகுப்பு நூலை 1961-இல் குழந்தை எழுத்தாளர் சங்கம் வெளியிட்டது. அதுவே முதன் முதலாகத் தமிழ் எழுத்தாளர் பற்றி வெளிவந்த விவரத் தொகுப்பு நூலாகும். அதன்பின்னர் 1962-இல் எல்லாத் துறைகளிலும் ஈடுபட்டுள்ள 563 தமிழ் எழுத்தாளர்களைப் பற்றிய விவரத் தொகுப்பு நூல் ஒன்றைத் தென்மொழிப் புத்தக டிரஸ்ட் வெளியிட்டது. குறைந்தது ஒரு நூலாவது எழுதியிருக்கவேண்டும் என்ற வரையறையுடன் அதனைத் தொகுத்ததால், நூலாசிரியர்கள் மட்டுமே அதில் இடம்பெற முடிந்தது. அத்தொகுப்பு வெளியான ஐந்தாறு மாதங்களில், பதிப்பு முழுமையும் செலவாகிவிட்டது. அதேபோல் மற்ெறாரு தொகுப்பு நூல் விரைவில் வெளிவர வேண்டும் என்று எழுத்தாள நண்பர்களும், இலக்கியத் தொடர்புடையோரும் இடையறாது வற்புறுத்தி வந்தனர். புத்தக டிரஸ்ட் வெளியிட்ட 'யார், எவர்?' தொகுப்பை முன்மாதிரியாகக் கொண்டே இத்தொகுப்பு தயாரிக்கப்பட்டுள்ளது. இந்த வகையில், புத்தக டிரஸ்டிற்கு நாம் பெரிதும் கடமைப் பட்டுள்ளோம்.

தமிழ் எழுத்தாளர் சங்கம் இவ்வாண்டு நடத்தும் 14-வது எழுத்தாளர் மாநாட்டில் வெளிவரும் இந்த நூலில் 1146 எழுத்தாளர்களைப் பற்றிய விவரங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. இவர்களில் சிலகாலமாகப் பத்திரிகைகளில் எழுதியவர்களும் உண்டு; தொடர்ந்து பல்லாண்டுகளாக எழுதி வருபவர்களும் உண்டு.

செய்தித்தாள்களில் இருமுறை அறிவித்தும், இவ்வாண்டு ஜூன் முதல் அக்டோபர் மாதம்வரை சங்க இதழாகிய 'பாரதி'யில் தொடர்ந்து வினாத்தாளை வெளியிட்டு நிறைவு செய்தனுப்புமாறு வேண்டுகோள் விடுத்தும், வினாத்தாள் கோரியவர்களுக் கெல்லாம் அவ்வப்போது அனுப்பிவைத்தும் இம் முயற்சியை மேற்கொண்டோம். பல பத்திரிகை அலுவலகங்களுக்கும் மொத்தமாக வினாத்தாள்களை அனுப்பி, எங்கள் முயற்சி வெற்றிபெற உதவுமாறு கோரினோம். ஆர்வத்தோடு எழுத்தாள நண்பர்கள் பலரும் உடனுக்குடன் தங்களைப் பற்றிய விவரங்களை அனுப்பிவைத்தனர். பலமுறை நினைவூட்டியும், பத்திரிகைகளில் அறிவித்தும் சிலரைப் பற்றிய விவரங்கள் கடைசி நேரம்வரை கிடைக்கவில்லை. விவரம் கிடைத்தவரை தொகுத்ததுடன், பதில் அனுப்பாதவர்களைப் பற்றிய விவரங்களையும் இயன்றவரை சேகரித்து இதில் தந்துள்ளோம்.

எழுத்தாளர்களின் இயற்பெயருடன் பட்டங்களையும் முகவரியையும் முதலில் குறிப்பிட்டுள்ளோம். புனைப்பெயர், பிறந்த தேதி அல்லது வயது, அறிந்த பிறமொழிகள், எழுதியுள்ள நூல்கள், நூல் வெளியான ஆண்டு, இன்னும் குறிப்பிடத்தக்க பிற செய்திகள் என்ற முறையில் விவரங்களை இணைத்துள்ளோம். எழுத்தாளர்களே தாம் முக்கியமெனக் கருதும் ஐந்து நூல்கள் வரை பெயர் கொடுத்துள்ளோம். ஒருவர் எழுதிய எல்லா நூல்களின் பெயர்களையும் இடவசதி கருதித் தர இயலவில்லை. ஆயினும், அவர்கள் எழுதியுள்ள நூல்களின் மொத்த எண்ணிக்கையைக் கூடுமானவரை குறிப்பிட்டுள்ளோம்.

மொழிபெயர்ப்பு நூல்கள் இருப்பின் அவற்றின் பெயர்களையும் கொடுத்துள்ளோம். தமிழில் மொழிபெயர்த்துள்ள நூல்களுடன், தமிழிலிருந்து பெயர்த்துப் பிறமொழிகளில் வெளியிட்டுள்ள நூல்களையும் குறிப்பிட்டுள்ளோம். சிலர் பல நூல்களை மொழிபெயர்த்திருப்பினும் 3, 4 நூல்களை மட்டுமே சேர்த்துள்ளோம்.

இவை தவிர, எழுத்தாளர் அனுப்பிய விவரங்களுள் அவர்கள் பெற்றுள்ள பரிசுகள், பாராட்டுகள், பணியாற்றும் பிற துறைகள் முதலிய குறிப்பிடத்தக்க செய்திகளையும் சுருக்கமாகக் கொடுத்துள்ளோம்.

இதில் கண்டுள்ள எழுத்தாளர் எல்லாருமே பத்திரிகைகளில் எழுதியிருக்கிறார்கள். அதனால் பத்திரிகைகளின் பெயர்களைக் குறிப்பிடவில்லை. ஆனால், புத்தகங்கள் எழுதி வெளியிட்டிராத எழுத்தாளர்கள், எத்தனை ஆண்டுகளாக எந்தெந்தத் துறைகளில் எழுதிவருகிறார்கள் என்பதைக் கூடுமானவரை கொடுத்துள்ளோம். நூலின் இறுதியில் புனைபெயர் அகராதி ஒன்றையும் இணைத்துள்ளோம்.

இத்தொகுப்பில் இன்றுள்ள தமிழ் எழுத்தாளர் அனைவரும் அடங்கிவிட்டனர் என்று கூறுவதற்கில்லை. கிடைத்தவரை முறைப்படுத்தி, தொகுத்து, அச்சிடும்போது ஒரு சில தவறுகள் நேர்ந்திருக்கலாம். அடுத்த பதிப்பில் இக்குறைகளை நிறை செய்துவிட முடியும் என்ற நம்பிக்கை எங்களுக்கு இருக்கிறது.

இத்தொகுப்பில் காணப்படும் விவரங்களில் திருத்தங்கள் தேவைப்படின் அல்லது மாற்றங்கள் ஏற்படின், அவ்வப்போது தமிழ் எழுத்தாளர் சங்கத்திற்குத் தெரிவிக்க வேண்டுகிறோம். இதில் இடம்பெற விட்டுப்போன எழுத்தாளர்

களும் தங்களைப்பற்றிய விவரங்களைத் தந்துதவ வேண்டு கிறோம்.

இந்தப் பயனுள்ள முயற்சி தக்கவாறு நிறைவேறப் பலரும் பலவாறு துணை புரிந்துள்ளனர்.

இந்த நூலை வெளியிட நிதி உதவி கோரி தமிழ்நாட்டு முதலமைச்சர் உயர்திரு. எம். பக்தவத்சலம் அவர்களுக்கு விண்ணப்பித்தோம். என்றுமே சங்கத்தின்பால் பேரன்பு கொண்ட அவர்கள் உடனே, சென்னை அரசாங்கத்தின் மூலம் ஆயிரம் ரூபாய் அனுப்பி உதவினார்கள். அவர்களே இந்நூலை வெளியிட்டு வைப்பதும் மகிழ்ச்சிக் குரியதாகும்.

இந்நூலில் பலர் விளம்பரங்கள் தந்து உதவியுள்ளனர். அரசினர் மானியமும், விளம்பரங்களும் கிடைத்திராவிடில், குறைந்தது ஐந்து ரூபாயாவது இதற்கு விலை வைக்கவேண்டி யிருந்திருக்கும்.

எழுத்தாளர்களிடமிருந்து கடைசி நேரம் வரையில், விவரங்களைப் பெற்றுக்கொண்டே போனதால், நூலைப் பதினைந்தே நாட்களில் அச்சிடும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டது. இவ்வளவு குறுகிய காலத்தில் அச்சிட்டுதவிய ஜீவன் அச்சகத்திற்கு எங்கள் நன்றி உரியதாகும்.

இம்முயற்சி வெற்றிபெற ஒத்துழைத்த எழுத்தாள நண்பர்கள் அனைவருக்கும், இத்தொகுப்பு வேலையில் உற்சாக முடன் ஈடுபட்டுப் பெரிதும் உதவிய சங்கத் துணைச் செயலாளர் திரு, கெ. பக்தவத்சலம், பொதுச் செயலாளர் திருமதி எம். எஸ். கமலா, திரு. தம்பி சீநிவாசன் ஆகியோருக்கும், விடைத் தாள்களிலிருந்து விவரங்களைச் சேகரித்து, ஒழுங்கு படுத்தி, அச்சுக்குக் கொடுப்பதற்கான கைப்பிரதிகளைத் தயாரிக்கும் பணியில் ஆர்வத்தோடு ஈடுபட்ட திருமதி அலமேலு அழகப்பன், திரு. எஸ். ராமசாமி, திரு. வ. அழகப்பன் ஆகியோருக்கும் மனமார்ந்த நன்றி.

நான் உடல் நலக் குறைவுற்று மருத்துவமனையில் இருந்தபோது, திரு. கண. முத்தையா இந்நூலின் பதிப்பிற்குப் பெரிதும் உதவினார். இந்நூலின் அச்சுப்படிகளைத் திரு. க. நாராயணன் அன்போடு சரிபார்த்து உதவினார். இவர்கள் அனைவருக்கும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன். வணக்கம்.

அழ. வள்ளியப்பா,
தலைவர்,
தமிழ் எழுத்தாளர் சங்கம்.

சென்னை
3-12-1966

# தமிழ் எழுத்தாளர் சங்கச் செயற்குழு (1966)

தலைவர் :

திரு. அழ. வள்ளியப்பா

துணைத் தலைவர்கள் :

திரு. சோமலெ
திரு. மயிலை சீனி. வேங்கடசாமி
திரு. எம். அப்துல் வஹ்ஹாப்
திரு. கே. ஆர். கல்யாணராமன் (மகரம்)

பொதுச் செயலாளர் :

திருமதி எம். எஸ். கமலா

துணைச் செயலாளர்கள் :

திரு. கெ. பக்தவத்சலம்
திரு. கு. இராமகிருட்டினன்

பொருளாளர் :

திரு. கண. முத்தையா

செயற் குழு :

திருமதி. ஜெயா அருணாசலம்
திரு. ஊ. ஜயராமன்
திரு. தம்பி சீநிவாசன்
திரு. பூவண்ணன்
திரு. நா. ஜகந்நாதன்
திரு. அன்புப்பழம்நீ
திரு. புத்தனேரி ரா. சுப்பிரமணியன்
திரு. கா. வேழவேந்தன்
திருமதி. கமலா விருத்தாசலம்
திரு. கோமதி ஸ்வாமிநாதன்
திரு. சிறுவை மோகனசுந்தரம்
திருமதி. சிவகாமிசிதம்பரனார்
திரு. சையத் முஹம்மத்
திரு. எஸ். சௌமிய நாராயணன் (புதுடில்லி)
திரு. ஏ. எஸ். முத்துசாமி, (குடியேற்றம்)

## விளக்கம்

| | |
|---|---|
| பு. பெ. | புனைபெயர் |
| பி : | பிறப்பு |
| அ. பி. மொ. | அறிந்த பிற மொழிகள் |
| மொ. பெ. | மொழிபெயர்ப்பு |
| த. எ. ச. | தமிழ் எழுத்தாளர் சங்கம் |




# அ

அகமது பஷீர். அ. வித்துவான்

22, தட்டாரத் தெரு, அதிராம்பட்டினம், தஞ்சாவூர் மாவட்டம்.

பு. பெ: அதிரை இளஞ்சித்தன், அதிரை நலங்கிள்ளி, பஷீர். பி: அதிராம்பட்டினம், தஞ்சாவூர் மாவட்டம், 18-5-1939. அ. பி. மொ: உருது, இந்தி, ஆங்கிலம். 13 ஆண்டு களாகக் கவிதை, ஆராய்ச்சி, நாடகம் எழுதி வருகிறார்.

அகிலாண்டம். பி. வி.

171, லாயிட்ஸ் ரோடு, சென்னை-14.

பு. பெ: அகிலன். பி: பெருங்களூர், திருச்சி மாவட்டம், 27-6-1922. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: புது வெள்ளம் (நாவல்), நிலவினிலே (சிறுகதை), வாழ்வில் இன்பம் (நாடகம்), இளைஞர்க்கு (கட்டுரை), தங்க நகரம் (சிறுவர் நூல்) முதலிய 30. மொ. பெ: தாகம் (Salome by Oscar Wilde), முழு நிலவு (Maupassant's Stories). 'சிநேகிதி' 'பெண்'—இரு நாவல்களும் ஹிந்தியிலும், கன்னடத்திலும் நூல்களாகவும், 'சிநேகிதி' தெலுங்குப் பத்திரிகையில் தொட ராகவும் வெளிவந்துள்ளன. 'பாவைவிளக்கு', 'வாழ்வு எங்கே?' திரைப்படமாக்கப்பட்டுள்ளன. 'பெண்' கலைமகள் நாவல் பரிசும், 'நெஞ்சின் அலைகள்' தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசும், 'வேங்கையின் மைந்தன்' சாகித்திய அகாதமிப் பரிசும் பெற்றுள்ளன. பல சிறு கதைகள் ரஷ்யன், ஜெர்மன், செக், ஆங்கிலம், இந்தி, மற்ற இந்திய மொழிகளில் பெயர்க்கப் பட்டுள்ளன. இவரது சிறுகதைகளைப் பற்றிய எழுத்துரை ஒன்று 1966-ல் மலேசியாவில் நடந்த உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டில் படிக்கப்பெற்றது. சொற்பொழிவுத் துறை அமைப்பாளர், அகில இந்திய வானொலி.

அக்கலாஞ்செட்டியார். வ. பா.

9, திருமூர்த்திக் கவுண்டர் வீதி, பொள்ளாச்சி.

பு. பெ: இளங்கதிர், கனல், வீரமதி, பொருளாட்சியான். பி: பொள்ளாச்சி, கோவை மாவட்டம், 17-8-1928. அ. பி. மொ: தெலுங்கு, மலையாளம், ஆங்கிலம்.

நூல்: இசைத் தென்றல் 1955, இசை மலர் 1965 (இரண்டும் கவிதைகள்), காட்டு மலர் 1966 (கட்டுரை, கதை)

அக்பர். எம். ஏ.

8, மரைக்காயர் லெப்பை தெரு, சென்னை-1.

பி: தூத்துக்குடி, 28-7-1935. அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம். பத்து ஆண்டுகளாகச் சிறுகதை, நாடகங்கள், கட்டுரைகள் எழுதி வருகிறார். முன்னாள் ஆசிரியர்: பிறை (மாத இதழ்), வளர்மதி (மாதமிருமுறை). தற்போது துணையாசிரியர்: உரிமைக் குரல் (வார இதழ்)

அடிகளாசிரியன். வித்துவான்

தமிழ் விரிவுரையாளர், கரந்தைப் புலவர் கல்லூரி, தஞ்சாவூர்-2.

பி: குகையூர், தென்னார்க்காடு மாவட்டம். வயது 57. அ. பி. மொ: கன்னடம், வடமொழி. நூல்: எங்களூர் 1936 (உரைநடை), பிள்ளைப் பாட்டு 1947, குழந்தை இலக்கியம் 1961, சான்றாண்மை 1962 (மூன்றும் செய்யுள்), தொடக்கப் பள்ளி 1949 (நாடகம்).உரையாசிரியர்: முத்துக் குமாரசாமி பிள்ளைத் தமிழ். ஏட்டுப் பிரதிகளிலிருந்து பதிப்பித்தவை: வீர சைவப் பிரமாணம், காமநாதர் கோவை, சரமணிமாலை, சிவப்பிரகாச விகாசம்.

அடைக்கலசாமி. எம். ஆர். M.A.

லொயோலா கல்லூரி ஆசிரியர்கள் குடியிருப்பு, சூளைமேடு, சென்னை-24.

பி: திருமயம், திருச்சி மாவட்டம், 10-10-1934: அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: தமிழ் இலக்கிய வரலாறு, 1960. தமிழ் விரிவுரையாளர்.

அண்ணல்தங்கோ. மு.

காட்டுப்பாடி நகர் விரிவகம், வ. ஆ. மாவட்டம்

பு. பெ: அண்ணல், தமிழ்க் காதலன். பி: கண்டவிராயன் பட்டி, இராமநாதபுரம் மாவட்டம், 12-4-1904. அ. பி. மொ: இந்தி, ஆங்கிலம், தெலுங்கு, கன்னடம், மலையாளம், சம்ஸ்கிருதம். நூல்: முத்தமிழ் ரத்நம் (1922), அறிவுப்பா (1935), தமிழ் மகள் தந்த செய்தி, மும்மூர்த்திகள் உண்மை தெரியுமா? (1938), அண்ணல் முத்தம்மாள் பாட்டு (1952) (எல்லாம் கவிதை). 'தமிழ் நிலம்' கிழமை இதழின் ஆசிரியர் (1920-36). நாட்டுத் தொண்டில் ஈடுபட்டு ஐந்து முறை சிறை சென்றவர். 'தூய தமிழ்க் காவலர்' என்ற சிறப்புப் பட்டம் பெற்றவர்.

அண்ணாதுரை. சி. என். M.A.

9, அவின்யூ ரோடு, சென்னை-34.

பு. பெ: அண்ணா. பி: காஞ்சிபுரம், 15-9-1909. அ.பி.மொ: ஆங்கிலம். நூல்: தம்பிக்கு (இரண்டு தொகுதி—கட்டுரை), குமரிக்கோட்டம், சந்திரமோகன், சந்திரோதயம் (மூன்றும் நாடகங்கள்) முதலிய 30. 'கபோதிபுரக் காதல்' கன்னடத்

தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. 'ஓர் இரவு', 'வேலைக்காரி', 'ரங்கோன் ராதா' திரைப்படமாக்கப்பட்டுள்ளன. ஆசிரியர்: 'காஞ்சி'. ராஜ்யசபை உறுப்பினர்.

அண்ணாமலை. இ. ப.

*33, சித்திரக்காரத் தெரு, மதுரை-1.*

பு. பெ: அலை. பி: அருப்புக்கோட்டை, இராமநாதபுர மாவட்டம், *11-6-1923*. அ. பி. மொ: ஆங்கிலம். 1949 முதல் சிறுகதை, கட்டுரை, நாடகம் எழுதி வருகிறார். 'தினமலர்' நிருபராகப் பணியாற்றியவர்.

அண்ணாமலை. இரா. M.A., B.T.

*16A, இராமகிருட்டின முதலி தெரு, பெரம்பூர், சென்னை-11.*

பி: இராசை, சேலம் மாவட்டம், *5-6-1926*. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. நூல்: புவியியல் நூல் 1966. மொ. பெ: இங்கிலாந்து வரலாறு I (மூலம்: கீத் ஃபீலிங்). வரலாற்று விரிவுரையாளர், பச்சையப்பன் கல்லூரி, சென்னை.

அண்ணாமலை. எஸ். ஏ. பி. M.A., B.L.

*6, ஹண்டர்ஸ் ரோடு, வேப்பேரி, சென்னை-7.*

பு. பெ: எஸ். ஏ. பி., பி: கானாடு காத்தான், இராமநாதபுரம் மாவட்டம், *12-12-1924*. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: பிரம்மசாரி, காதலெனும் தீவினிலே, நீ, சொல்லாதே (நான்கும் நாவல்). தொகுப்பு: Vedanta through Letters (Letters of Swami Chinmayanandha) 'குமுதம்' வார இதழின் ஆசிரியர்.

அண்ணாமலை. தி. B.A. (HONS.)

*29/53, பஜனைக் கோவில் தெரு, கோவை-1.*

பு. பெ: அலை. ஜெயபாலன், பி: கோவை, 1939. அ. பி. மொ: ஆங்கிலம். சிறுகதை எழுத்தாளர்.

அண்ணாமலை. மு. M.A.

*107, கனகசபை நகர், சிதம்பரம்.*

பி: கோனுபட்டு, திருச்சி மாவட்டம், *20-4-1928*. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: தாமரைக் குமரி 1948, அன்பு வெள்ளம் 1962 (இரண்டும் கவிதை), இலக்கிய மேடை 1961 (இலக்கிய விமரிசனம்), வள்ளுவர் தனித் தன்மை 1962 (ஆராய்ச்சி), வெற்றிபெற்ற வீரன் (சிறுவர் கதை). மொ. பெ: கற்பனையும் காதலும் (மாபஸான், ஹார்டி கதைகள்). அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர்.

அத்தியப்பா. ஆர்.

*மூனுசாவடி, பாச்சல் P. O., புதுச்சத்திரம் (வழி), சேலம் மாவட்டம்.*

பி: மூனுசாவடி, *6-7-1910*. அ. பி. மொ: ஆங்கிலம். 1928 முதல் சிறுகதை, கட்டுரை எழுதி வருபவர். சர்வோ

தய எழுத்தாளர். சுதந்திரப் போராட்டத்தில் பங்கு கொண்டவர்.

**அநவரத விநாயக மூர்த்தி. வை.**

1, கலாசாலை வீதி, திருநெல்வேலி வடக்கு, யாழ்ப்பாணம், இலங்கை.

பு. பெ : இணுவை மூர்த்தி. பி: இணுவில், யாழ்ப்பாணம், 14-8-1923. அ. பி. மொ: ஆங்கிலம். இலங்கை 'உதயம்' கௌரவ ஆசிரியராகப் பணியாற்றியவர். இலங்கை வானொலியில் இவரது கட்டுரைகள் ஒலிபரப்பப்பட்டுள்ளன. 22 ஆண்டுகளாக எழுதி வருகிறார்.

**அப்துல் கபூர். கா. M.A.**

அருளகம், திருவிதாங்கோடு, கன்னியாகுமரி மாவட்டம்.

பி: திருவிதாங்கோடு, 10-4-1925. அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம், உர்தூ, அரபி. நூல்: மும்மணிமாலை 1954, இறையருள் மாலை 1959, (இரண்டும் துதிப்பாடல்கள்), இலக்கிய மீந்த தமிழ் 1957 (கட்டுரை). மும்மணி மாலையின் சில பகுதிகள் ஆங்கிலத்திலும் அரபியிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

**அப்துல் கபூர் சாஹிப். கா. சை.**

1. சி. காஜிமார் தெரு, மதுரை.

பு. பெ: திருக்குறளார், முப்தீ. பி: மதுரை, 15-3-1908. அ. பி. மொ: ஆங்கிலம், உர்தூ, அரபீ, பாரசீகம். நூல்: இதோ கடவுள் 1932, மரித்தபின் மனிதநிலை 1935, ரமலான் அல்லது நோன்பு 1950, தவறின்றித் தமிழ் எழுத! 1965. 'அல் இஸ்லாம்' மாத இதழின் ஆசிரியர்.

**அப்துல் கரீம், திருவையாறு. அ. புலவர்**

தமிழாசிரியர், சிங்காரம் பிள்ளை உயர்நிலைப்பள்ளி, வில்லிவாக்கம், சென்னை-49.

பு. பெ: தமிழ்த்துளி, அமுதநிலவன். பி: திருவையாறு, தஞ்சாவூர் மாவட்டம், 15-1-1937. அ. பி. மொ: ஆங்கிலம், ஹிந்தி. பல மேடைக் கவியரங்குகளிலும், வானொலிக் கவியரங்குகளிலும் பங்கு கொண்டவர்.

**அப்துல் வஹ்ஹாப். M.A.**

14, லெப்பைத் தெரு, ஆலந்தூர், சென்னை-16

பு. பெ: துராப், பாரூக், ஸித்தீக், பிலால், முபீன், எம். ஏ. பி: செங்கோட்டை, நெல்லை மாவட்டம், 29-5-1920. அ. பி. மொ: அரபி, ஆங்கிலம், மலையாளம், உர்தூ. நூல்: திருக்குர்ஆன் பொன்மொழிகள் 1955 (தொகுப்பு), நன்மணிகள் நால்வர் 1959, சுவர்க்கத்துக் கவிஞன் 1960 (இரண்டும் வரலாற்றுக் கட்டுரைகள்). தமிழ் எழுத்தாளர் சங்கத் துணைத் தலைவர்.

அப்துற்-றஹீம். மு. ரு. மு. B. A.

*155/156*, அங்கப்ப நாயக்கன் தெரு, சென்னை-1.

பி: தொண்டி, இராமநாதபுரம் மாவட்டம், 27-4-1922. அ. பி: மொ: ஆங்கிலம். நூல்: வாழ்க்கையில் வெற்றி, கவலைப்படாதே, வாழ்வைத் துவங்கு, முன்னேறுவது எப்படி?, நபிகள் நாயகம் முதலிய 30. மொ. பெ: நகரத் தலைவர் (Mayor of Caster Bridge).

அப்துஸ் ஸமது. ஆ. கா. அ. M.A.

*45*, மரைக்காயர் லப்பை தெரு, சென்னை-1.

பு. பெ: ஷிப்லீ, அஸத், ஷபீக். பி: காரைக்கால், 4-10-1926. அ. பி. மொ: ஆங்கிலம், உர்தூ, அரபி. நூல்: மாநிலத்தின் மணிவிளக்கு 1952, நற்பணியாற்றிய நபிமணி 1963 (இரண்டும் வரலாறு), திருக்குர் ஆனுக்கு ஒரு முன்னுரை 1960 (ஆராய்ச்சி). திருக்குர்ஆன் முழுமைக்கும் முதல் முதலாகத் தமிழ் மொழி பெயர்ப்புச் செய்து முடித்தவர். 'மணிவிளக்கு' இதழ் ஆசிரியர். ராஜ்ய சபை உறுப்பினர்.

அப்பாத்துரை. கா. M.A., L.T.

'அன்னை இல்லம்' 8, அப்பாத்துரையார் தெரு, சென்னை-18.

பி: ஆரல்வாய்மொழி, கன்னியாகுமரி மாவட்டம், 24-6-1907. அ. பி. மொ: ஆங்கிலம், ஹிந்தி, மலையாளம், சம்ஸ்கிருதம் முதலியன. சங்க இலக்கிய மாண்பு 1949 (திறனய்வு), நிழலும் ஒளியும் 1950 (கவிதை), வெற்றித் திருநகர் 1960 (வரலாறு), கழக ஆங்கிலத் தமிழ்ச் சொல் அகரவரிசை 1952 (வரலாறு), வாடா மலர் 1965 முதலிய 80. மொ. பெ: ஷேக்ஸ்பியர் கதைகள், கெஞ்சி கதை 1965 (ஜப்பானிய நாவல்), மாலதி மாதவன் 1952 (சம்ஸ்கிருத நாடகம்—பவபூதி), குழந்தை உலகம் 1955(Alice in Wonderland), இந்துலேகா 1952 (மலையாள நாவல்) முதலிய 75. ஆங்கில நூல்கள்: The Mind and Thought of Thiruvalluvar 1966, Indian Language problem 1947. தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர் (1960). தமிழ் எழுத்தாளர் சங்கக் கேடயம் பெற்றவர் (1965). சென்னைப் பல்கலைக் கழக ஆங்கிலத் தமிழ்ச் சொற்களஞ்சியத்தின் துணையாசிரியராகப் பணிபுரிந்தவர். தமிழக ஆட்சி மொழிச் சட்ட ஆக்க ஆணைக்குழுவின் முழுநேர உறுப்பினர். முப்பால் ஒளி (மாத இதழ்) ஆசிரியர். 'பன் மொழிப் புலவர்' என்ற சிறப்புப் பட்டம் பெற்றவர்.

அப்பாத்துரை, சாலமன். அ. எ. B.A.

*27*, எட்டாம் வீதி, காந்திபுரம், கோயம்புத்தூர்-12.

பி: சென்னை, 31-10-1913. அ. பி. மொ: ஆங்கிலம், தெலுங்கு, இந்தி. நூல்: பன்னீர்த் திவலைகள் 1958 (சிறு கதை), மீகாளின் மணமகன் (நாவல்), செஞ்சிப் புதையல் (சிறுவர் கதை), இவரே இம்மானுவேல் (நாடகம்), தகவல் களஞ்சியம் 1961.

அப்பாஸ். எம்.ஏ.

'சிவப்பு ரோஜா', 20, புலியூர்—பகுதி 3, சென்னை-24.

பு. பெ: விஜயன், வணங்காமுடிக் கவிராயர். பி: ஏர்வாடி, நெல்லை மாவட்டம், 29-5-1922. அ. பி. மொ: ஆங்கிலம், உர்தூ, இந்தி. நூல்: கள்ளத்தோணி 1953 (நாடகம்), ஒரே இரத்தம் 1960 (நாவல்), தெய்வங்கள் 1960 (சிறு கதை), விசித்திரப் பெண் 1954 (கவிதை), ஐந்திணை இன்பம் 1960 (கட்டுரை) முதலிய 29. மொ. பெ: இந்தியக் கிராமிய நடனங்கள் (Folk Dances of India), காதல் வாழ்க! (Lady into Fox) இன்குலாப் (Inquilab) முதலியன. திரைப் படக்கதை—வசனகர்த்தா. 'கள்ளத் தோணி' சிங்களத் திலும், மலையாளத்திலும் மொழிபெயர்ப்பாகியுள்ளது.

அப்புலிங்கம். க.

சேக்கிழார் இல்லம், கொண்டயம்பேட்டை, திருவானைக்கா திருச்சி-5.

பு. பெ: கலைவாணன். பி: திருவானைக்கா, 5-8-1917. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: உதயம் 1957 (காவியம்), மனச்சிமிழ் 1955, நிவேதனம் 1955, அழியா அழகி 1960, காவிரி 1963 (நான்கும் கவிதைத் தொகுப்பு). 1940-ம் ஆண்டு முதல் எழுதி வருகிறார். பல வானொலிக் கவியரங்குகளிலும், மேடைக் கவியரங்குகளிலும் பங்கு கொண்டவர்.

அப்புஸ்வாமி. பெ. நா. B.A., B.L.

'சித்ரா', 24, இரண்டாவது மெயின் ரோடு, காந்திநகர், சென்னை-20.

பு. பெ: முத்தண்ணா, பேனா. பி: திருவல்லிக்கேணி, சென்னை, 31-12-1891. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ் க்ருதம், தெலுங்கு. நூல்: அற்புத உலகம், மின்சாரத்தின் விந்தை, விஞ்ஞானக் கதைகள், தேன்துளி. (இலக்கியக் கதைகள்), சித்திரக் கதைப் பாடல்கள் (சிறுவர் நூல்) முதலிய 50. மொ. பெ: விஞ்ஞானமும் விவேகமும் (Science and Commonsense), இன்றைய விஞ்ஞானமும் நீங்களும் (Today's Science and You), கால யந்திரம் (The Time Machine), சீனாவின் கதை (The Story of China) முதலிய பல விஞ்ஞான நூல்களும், குழந்தை நூல்களும். பேராசிரியர் ஜே. பி. மாணிக்கத்துடன் சேர்ந்து கூட்டாக எழுதிய நூல்கள்: வானத்தைப் பார்ப்போம், விஞ்ஞானம் பேசுகிறார் (சிறுவர் நூல்கள்), அணுவின் கதை முதலியன. மின்சாரத்தின் விந்தை, வானொலியும் ஒலிபரப்பும், எக்ஸ்-கிரணங்கள், அணுவின் கதை—இவை சென்னைப் பல்கலைக் கழகப் பரிசு பெற்றவை. வானத்தைப் பார்ப்போம்—தெலுங்கில் புத்தகமாக வந்துள்ளது; யுனெஸ்கோ பரிசு பெற்றது. குழந்தை எழுத்தாளர் சங்கக் கேடயம் பெற்ற வர் (1961). தமிழ் எழுத்தாளர் சங்கக் கேடயம் பெற்ற வர் (1965). தமிழ் எழுத்தாளர் சங்கக் கட்டுரைப் போட்டி யில் (1958) பதக்கம் பெற்றவர். 'கலைமகள்' இதழில்

குழந்தைப் பகுதியைத் துவக்கியவர். தென் மொழிப் புத்தக டிரஸ்ட் 1966-ல் நான்கு தென் மொழிகளிலும் நடத்திய மொழி பெயர்ப்புப் பயிற்சிப் பண்ணையின் இயக்குநர்.

**அமலநாதன். சி. ஜெ.** M.A.

கல்வெட்டு ஆய்வாளர், தொல்பொருள் இலாகா, சென்னை-4.

பி: சென்னை. 24-8-1936. அ. பி. மொ: ஆங்கிலம். கல்வெட்டு ஆராய்ச்சி, சரித்திர ஆராய்ச்சிகள் பற்றி பத்து ஆண்டுகளாக எழுதி வருகிறார்.

**அமலன். எஸ்.பி.**

'ஜெயம் இல்லம்' 183, துறையூர் ரோடு, பெரம்பலூர், திருச்சி.

பு. பெ: மேரியண்ணு, மலர் மகன், கிக்கி, டுமீலன். பி: பெரியவர் சீலி, திருச்சி மாவட்டம். 30-11-1934. அ. பி. மொ: ஆங்கிலம், ஹிந்தி. நூல்; விடாதே பிடி. 1963, ஏழு கதைகள் 1963,(இரண்டும் சிறுவர் இலக்கியம்). 16 ஆண்டுகளாக எழுதி வருகிறார். 'டுமீல்' என்னும் சிறுவர் மாத இருமுறை இதழின் ஆசிரியர். 32-க்கு மேற் பட்ட மேடை நாடகங்களை எழுதி அரங்கேற்றியவர். பல கவியரங்குகளிலும் வானொலி நிகழ்ச்சிகளிலும் பங்கு கொண்டவர்.

**அமலாச்சாரி சு. வே.**

சின்னையாபுரம் பங்களா, புதுச்சேரி-1.

பு. பெ: புதுவை அமலன், அமலன், சக்கரவர்த்தி. பி: புதுச்சேரி, 3-6-1946. அ. பி. மொ: ஹிந்தி, ஆங்கிலம். நூல்: இலக்கியம் 1965, மாயப் பிசாசு 1965. (சிறுவர் இலக்கியம்)

**அமலோற்பவநாதன். அ.**

டிக்கட் பரிசோதகர், 20/95—I-20, சுப்பிரமணியபுரம், திருச்சி-1.

பு. பெ: அமலன், ஏ. ஏ. நாதன். பி: தஞ்சை, 30-4-1921. அ. பி. மொ: தமிழ், ஆங்கிலம், உருது. நூல்: கற்பனைச் சோலையிலே 1960 (சிறுகதை).

**அமிர்தகணேசன். தி. ச.**

Pharmacist, Railway Dispensary, Gooty, R.S.

பி: திருச்சிராப்பள்ளி, 30-10-1930. அ. பி. மொ : ஆங்கிலம், தெலுங்கு. நூல்: குருடி 1952, சிங்கப்பூர் அத்தான் 1962, இயேசு அழைக்கின்றார் 1962 (மூன்றும் சிறுகதை). சில நாடகங்களும் எழுதியுள்ளார். குத்தி தமிழ் மன்றச் செயலாளர்.

**அம்சா. ப. அ.**

முருக்கங்குடி, தஞ்சை மாவட்டம்.

பி: முருக்கங்குடி, 15-6-1935. அ. பி. மொ: இந்தி, ஆங்கிலம். நூல்: கல்விப் பூங்கா 1954, பூங்காவனம் 1955, கல்விப் பயணம் 1958, கல்விச்சோலை 1960.

**அம்பிகைபாகன், சங்கரப்பிள்ளை**

'மணிமனை', மல்லாகம், யாழ்ப்பாணம், இலங்கை.

பி: சுன்னாகம், யாழ்ப்பாணம், 3-5-1908. அ.பி. மொ: ஆங்கிலம். நூல்: இலக்கணம் ஸ்ரீமுத்துக்குமாரசாமித் தம்பிரான், சுன்னாகம் செல்லாச்சி அம்மையார்.

**அய்யாசாமி. ர. M.A.**

12, நாட்டு சுப்பராய முதலி தெரு, சென்னை-4.

பி: கல்லாபுரம், கோவை மாவட்டம். 15-10-1912. அ. பி. மொ: தெலுங்கு, கன்னடம், மலையாளம். நூல்: புத்தர் அருள் வாக்கு 1944, காணிக்கை 1959. தொகுப்பு: நாடோடிப் பாடல்கள் 1959, குழந்தைகளுக்கு நாடோடிப் பாடல்கள் 1960. இவரது 'பால ராமாயணம்' வானொலியில் தொடர்ந்து ஒலிபரப்பப்பெற்றது. சிறுவர் நிகழ்ச்சிப் பொறுப்பாளர், அகில இந்திய வானொலி, சென்னை.

**அய்யாவு. அ. B.A., B.T.**

உதவி ஆசிரியர், சர்வ ஜன உயர்நிலைப்பள்ளி, கோவை-4.

பி: கோகிலாபுரம், மதுரை மாவட்டம், 18, ஐப்பசி, விரோதி கிருது. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: பூதானமும் பொதுமையும் 1958 (கவிதை).

**அரங்கசாமி. திரு.**

புரட்சியகம், சேலிய மேடு, கடலூர். என்.டி.

பு. பெ: வாணிதாசன். பி: வில்லியனூர், (புதுவை) 22-7-1915. அ. பி. மொ: பிரஞ்சு. நூல்: எழிலோவியம் 1954, கொடி முல்லை 1950, தமிழச்சி 1949, இன்ப இலக்கியம் 1959, குழந்தை இலக்கியம் 1959 (ஐந்தும் கவிதை) முதலியன. ஆங்கில, ரஷிய, இந்திய மொழி பதினான்கிலும் சில கவிதைகள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

**அரங்கசாமி. ப. புலவர்**

12, புதுத் தெரு, லால்குடி, திருச்சி மாவட்டம்.

பி: திருமழபாடி, திருச்சிராப்பள்ளி, 1-7-1921. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: புறநானூறும் புலவர் வாழ்வும் 1954, செந்தமிழ் வளர்த்த பைந்தமிழ்ப் பாவையர் 1955, காவியத்தில் மூவர் 1957, வனவிலங்குகள் 1956, பண்பட்ட வாழ்க்கை 1963. மாநிலத் தமிழாசிரியர் கழகத் துணைத் தலைவர். திருச்சி மாவட்டத் தமிழாசிரியர் கழகத் தலைவர்.

**அரங்கசாமி. மண.**

3/577, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-5.

பி: திருவத்திபுரம், 28-11-1934. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: சி.ஐ.டி. சிங்காரம் 1959 (சிறுவர்க்கு).

**அரங்கண்ணல். இராம.**

102, அப்பர்சாமி கோயில் தெரு, மயிலை, சென்னை-4.

பி: கோமல், தஞ்சை மாவட்டம். அ. பி. மொ: ஆங்கிலம். 'குடியரசு', 'முஸ்லீம்', 'விடுதலை' இதழ்களின் துணை ஆசிரிய

ராகவும், 'திராவிடநாடு' பொறுப்பாசிரியராகவும் பணி புரிந்தவர். தற்போது 'அறப்போர்' இதழின் ஆசிரியர். செந்தாமரை, பொன் விளையும் பூமி, மகனே கேள், பச்சை விளக்கு முதலிய திரைப்படங்களின் வசனங்களை எழுதி யுள்ளார். சென்னை சட்ட மன்ற உறுப்பினர்.

**அரங்கநாதன். இராம.** B.SC.

ஆசிரியர், 'வான்மதி', கோவை-15.

பு. பெ: சாரநாதன், அனந்தசயனன், இராஜராஜன். பி: கோவை 28-7-26. அ. பி. மொ: ஆங்கிலம். 15 ஆண்டு களாக நாடகம், ஆராய்ச்சி, கட்டுரை எழுதி வருகிறார். ஆசிரியர் 'வான்மதி' (மாத இதழ்)

**அரங்கநாதன். கா. தி.**

காரமடை P. O., கோவை மாவட்டம்.

பி: காரமடை, கோவை மாவட்டம், 10-4-1928. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: குழந்தையும் தெய்வமும், 1964, குழலோசை 1962, போரும் ஏரும் 1966 (மூன்றும் குழந் தைக் கவிதைகள்). வானொலியிலும், மேடைகளிலும் வில் லிசைக்கான கதைகள், பாடல்கள் எழுதி நடத்தி வருபவர்.

**அரங்கநாதன். சீ.**

13A, நாயர் வரதப்பிள்ளைத் தெரு, மீர்சாகிப் பேட்டை, சென்னை-14.

பு. பெ: இன்பன், ஆனந்தி, நீலா. பி: மாயூரம். 28-11-1941. அ. பி. மொ: ஆங்கிலம். பல பத்திரிகைகளில் சிறு கதை களும், ஓரங்க நாடகங்களும் எழுதியுள்ளார். ஓவியத்திலும் ஆர்வமுள்ளவர்.

**அரங்கநாதன். ம.**

46, சீனுவாசப் பிள்ளை சந்து, திருப்பாதிரிப்புலியூர், தென் னார்க்காடு மாவட்டம்.

பி: உரத்தநாடு, தஞ்சை மாவட்டம். 13-6-1918. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: ஈத்துவக்கும் இன்பம் 1961 (கவிதை), முத்தையனுக்கு வழி பிறந்தது 1957, வள்ளுவர் பேசுகிறார் 1956. (இரண்டும் முதியோர்க்கு)

**அரங்கன். கி.** M.A., B.O.L.

மொழியியல் துறை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர்.

பி: சின்னசேலம். தெ. ஆ. மாவட்டம், 3-9-1942. அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம், கன்னடம். சிறுகதை, கட்டுரை, ஆராய்ச்சி எழுதி வருகிறார்.

**அரங்கன். து.**

மேட்டுப்பாளையம் கிராமம், வீரராகவபுரம் அஞ்சல் (வழி) பூவிருந்தவல்லி.

பி: மேட்டுப்பாளையம் கிராமம், செங்கற்பட்டு மாவட்டம், 8-6-1934. அ. பி. மொ: தெலுங்கு, ஆங்கிலம். ஐந்து ஆண்டுகளாக எழுதிவரும் இளங் கவிஞர்.

அரவிந்தன். எஸ். கே. B.A.

18/1, காசி விசுவநாதஸ்வாமி கோவில் தெரு, வேலூர், (வட ஆர்க்காடு)

பு. பெ: மலர்மன்னன். பி: காகஸ்நகர், முன்னுள் ஹைதராபாத் சமஸ்தானம், 18-12-1937. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி, தெலுங்கு, வங்காளி. நூல்: புறங்காட்டும் வீரம் 1956, சிந்தனையாளர் நியெட்சே 1965 (வரலாறு), பட்சி சிம்மன் 1964, மர்மக் குதிரைகள் 1964 (சிறுவர் நூல்).

அரிகிருஷ்ணன். தி. வி.

12, வாத்தியார் கந்தப்பிள்ளை வீதி, சென்னை-7.

பு. பெ: சூர்யா, அமரவாணன். பி: சென்னை 20-1-1935. அ. பி. மொ: இந்தி, ஆங்கிலம். 1948 முதல் கவிதை, நாடகப் பாடல் எழுதிவருகிறுர்.

அரியரத்தினம். இராஜ.

31, Wilson Street, Hultsdorp, Colombo, Ceylon-12.

பு. பெ: சோணுசலம், பதுமன், அஜன். பி: சாவகச்சேரி, யாழ்ப்பாணம், 11-5-1916. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: கல்கி பிறந்தார் 1956 (திறனுய்வு), துருக்கியின் தந்தை, தங்கப் பூச்சி (நாவல்). பத்திரிகைத் துறையில் இவர் 26 ஆண்டுகளாக உழைத்து வருபவர். புதுடில்லியில் நடைபெற்ற ஆசிய எழுத்தாளர் மாநாட்டில் இலங்கையின் சிறப்புப் பிரதிநிதியாகப் பங்கு பெற்றவர். 'ஈழகேசரி'யின் முன்னுள் ஆசிரியர். கொழும்பிலிருந்து வெளிவரும் 'சிந்தாமணி' என்ற சித்திர வார இதழுக்கும் 'தினபதி' நாளிதழுக்கும் ஆசிரியர்.

அருணுசலக் கவுண்டர். கு.

தமிழ்ப் பேராசிரியர், ம. தி. தா. இந்து காலேஜ், திருநெல்வேலி-4.

பி: நஞ்சைப் புளியம்பட்டி, கோவை மாவட்டம், 1908. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம். நூல்: கம்பராமாயண சாரம் 1953 (3 தொகுதிகள்), எல். டி. சுவாமிக்கண்ணு பிள்ளை 1958, எஸ். ஏ. கிருஷ்ண பிள்ளை 1960, மாயூரம் முனிசிப் வேதநாயகம் பிள்ளை 1958 (மூன்றும் வாழ்க்கை), கரும்பின் கதை.

அருணுசலம். இராம. பழ.

C/o. Penguin Textile Mills Office, Taranaka, Uppal Road, Hyderabad, A.P.

பு. பெ: சோம கனகசபை, பொன்வண்டு. பி: காரைக்குடி, 2-9-1933. நூல்: மாயாவிநோதன் (நாவல்.)

அருணுசலம். எல்.

அருணுேதயம், இராயப்பேட்டை, சென்னை-14.

பு. பெ: அருணன். பி: தேவகோட்டை, 22-12-1924. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: புது வாழ்வு 1958 (நாவல்), நாட்டியக்காரி 1956 (சிறுகதை), இல்லற இன்பம்.

**அருணாசலம். கே.**

*10*. போரூர் சோமசுந்தர முதலித் தெரு, சென்னை-*17*.

பு. பெ: அருண். பி: தஞ்சை. *27-12-1912*. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: இந்திய சமஸ்தானங்கள் *1941* (சரித்திரம்), அந்த நாளில் *1963*, தமிழகத்தின் ஒளிவிளக்கு *1963*, யார் இவர்? *1966*, ஜே ஹிந்த் *1947* (நான்கும் வாழ்க்கை வரலாறு) முதலிய *12* நூல்கள். சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டு மூன்று முறை சிறைசென்றவர். சுதந்திரச் சங்கு, பாரத தேவி, தினமணி, ஆனந்த விகடன், சுதந்திரம், பாரிஜாதம் பத்திரிகைகளின் ஆசிரியக் குழுவில் பணியாற்றியவர்.

**அருணாசலம் கே. சி. எஸ்.**

*18*, அன்சாரி தெரு, பொள்ளாச்சி.

பி: பொள்ளாச்சி, *1921*. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: கவிதை என் கைவாள் *1965* (கவிதை), பூர்வீகச் சொத்து *1965* (சிறுகதை). தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்ற மாநிலத் துணைச்செயலாளர்.

**அருணாசலம். சு. கு. புலவர், M.A., B.O.L.**

*அம்மாப்பேட்டை, சேலம்-3*.

பு. பெ: நல்லிறையனார். பி: அம்மாப்பேட்டை, சேலம். அ. பி. மொ: ஆங்கிலம், பிரஞ்சு, செருமன், இந்தி. நூல்: தமிழ் இலக்கணத் தெளிவு *1964* (இலக்கணம்), இலக்கிய வரலாறு—தோற்றுவாய் *1965*, இலக்கிய வரலாறு—கழகக் காலம் *1966*. நூல் வெளியீட்டாளர்.

**அருணாசலம். டி. ஆர்.**

எஸ். என். தேவஸ்தானம், சிக்கல், தஞ்சை மாவட்டம்.

பி: தேவகோட்டை, *26-11-1915*, அ. பி. மொ: ஆங்கிலம், ஹிந்தி. மொ. பெ: நான் கண்ட காந்தி *1949* (A Week With Gandhi by Louis Fischer), காந்திஜி வாழ்க்கையில் சில ரசமான சம்பவங்கள் *1948* (Sheaf of Gandhi Anecdotes by G. Ramachandran), புதிய காங்கிரஸ் (By Shankar Rao Deo). விடுதலைப் போரில் பங்கு பெற்றவர்.

**அருணாசலம். வ.**

*35*, வாலாஜா ரோடு, சென்னை-*2*

பி: பாளையங்கோட்டை, நெல்லை மாவட்டம், *7-6-1919*. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: ரேடியோ மெக்கானிசம் *1962*, ரேடியோ-ரிப்பேரிங் *1963*, ட்ரான்ஸிஸ்டர்-மெக்கானிசம் *1963*, ஆம்பிளிபயர்-மெக்கானிசம் *1963*, எலக்ட்ரிக்கல்-இஞ்சினீயரிங்-1-ம் பாகம் *1964*. 'ரேடியோ-டெலிவிஷன்' என்ற தமிழ் மாத இதழின் ஆசிரியர். எலக்ட்ரானிக் தொழில் நுட்பங்கள் குறித்து மாலைநேர வகுப்புகளைத் தமிழில் நடத்தி வருகிறார்.

அருணாசலம். ஜி.

123. ஏ. வரதராஜ முதலி தெரு, ஜோலார் பேட்டை, (வ. ஆ.)

பி: குடியாத்தம், வ. ஆ. மாவட்டம், 22-10-1920. நூல்: எல்லோரும் இன்புற்றிருக்க (ஜெயப் பிரகாஷ்) 1948, குறை கூறுகிறோம், குற்றம் சாட்டுகிறோம் 1949, முதல் தாம்பூலம் 1953 (மூன்றும் கட்டுரை).

'செம்பறவை' என்ற வார இதழின் ஆசிரியராக இருந் திருக்கிறார். சோஷலிஸப் பொருளாதாரத் தத்துவத்தைப் பற்றித் தொடர்ந்து எழுதி வருபவர். 1942-ம் ஆண்டு ஆகஸ்டு புரட்சியில் ஏழாண்டு சிறைத் தண்டனை பெற்ற அரசியல் தியாகி.

அருள்செல்வநாயகம்

குருமண்வெளி, களுவாஞ்சிகுடி, இலங்கை.

பு. பெ: திருவருள், குபேரன், டி. ரி. எஸ்., பி: குருமண்வெளி கிழக்கு இலங்கை, 4-7-1926. அ. பி. மொ: ஆங்கிலம், சிங்க ளம். நூல்: விபுலாநந்த அடிகள் 1954 (வாழ்க்கை வரலாறு), வாழமுடியாதவன் 1954, பாசக் குரல் 1963 (இரண்டும் நாவல்), தாம்பூல ராணி 1958 (சிறுகதை), ஈழமும் தமிழரும் 1963 (ஆராய்ச்சி) முதலிய 18 நூல்கள். பல நாடகங்கள் எழுதிப் பரிசு பெற்றுள்ளார்.

அலி. ந. B.A., B.T.

19, கீழகுத்தித் தெரு, துறையூர், திருச்சி மாவட்டம். பு. பெ: துறையூர் ந. அலி, அலியார். பி: துறையூர், திருச்சி மாவட்டம், 4-6-1936. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி (விஷாரத்), உர்தூ. காரைக்குடி திருக்குறள் கழகம், தஞ்சாவூர் மாணவர் கழகம் நடத்திய கவிதைப் போட்டி களில் முதற் பரிசுபெற்றவர். பல பத்திரிகைகளில் பத்தாண்டுகளாகக் கவிதைகள் எழுதி வருகிறார்.

அவினாசிலிங்கம். தி. சு. B.A., B.L.

ஸ்ரீராமகிருஷ்ண வித்யாலயம் P. O. கோவை மாவட்டம். பி: திருப்பூர், 5-5-1903. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: இந்தியப் பொருளாதார நூல் 1935, குழந்தை வளர 1948, திருக்கேதார யாத்திரை 1941, வாழ்க்கையின் அடிப்படை 1946, நான் கண்ட மகாத்மா 1950 முதலிய 10. ஆங்கிலத்தில்: Understanding Basic Education, Gandhiji's Experiments in Education, Swami Vivekananda on Education. மொழிபெயர்ப்பு: Colombo to Almora (by Swami Vivekananda), Satyagraha in South Africa (Gandhiji). முன்னாள் சென்னை மாநிலக் கல்வி அமைச்சர்; தமிழ் வளர்ச் சிக் கழகத்தையும், ஸ்ரீ இராமகிருஷ்ண மிஷன் வித்யாலயத் தையும், ஸ்ரீ அவினாசிலிங்கம் கல்வி அறநிலையத்தையும் நிறுவி யவர். இந்தியாவிலே முதன்முதலாக நூல் நிலையச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவந்தவர். பார்லிமென்ட் அங்கத்தினர்.

**அழகப்பன். அழ.**

*14, பீட்டர்ஸ் ரோடு, சென்னை-14.*

புனை பெ: ரத்னம். பி: உ. சிறுவயல், இராமநாதபுர மாவட்டம், *12-6-1923*. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: காந்திமதி *1950*, ஜப்பான் பொம்மை *1958*, பறவைகளின் மகாநாடு *1963* (மூன்றும் சிறுவர் கதை), சங்கனும் ரங்கனும் *1956* (சிறுவர் நாவல்). மொ. பெ: முயல் குட்டி முத்து. (The Tale of Peter Rabbit by Beatrix Potter) *1959*. தமிழில் எழுத்தாளர் பற்றி வெளிவந்த முதல் தொகுப்பு நூலாகிய 'குழந்தை எழுத்தாளர் யார், எவர்?' (*1961*) என்னும் நூலை, குழந்தை எழுத்தாளர் சங்கத்திற்காகத் தொகுத்தவர்.

**அழகப்பன். ஆறு.** M.A., M. Litt.

தமிழ் விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், தெ. ஆ. மாவட்டம்.

பி: ஆத்தங்குடி. இராமநாதபுர மாவட்டம், *10-8-1937*. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: சிரித்த மலர் *1964*(நாடகம்), நாடகச் செல்வம் *1966* (நாடகம்), தாலாட்டுப் பாட்டு *1966*(நாட்டுப்புறப் பாடல்கள்). ஆறாயிரத்திற்கு மேற்பட்ட தாலாட்டுப் பாடல்கள் சேகரித்துள்ளார். நாட்டுப்புறப் பாடல்களைப் பற்றித் திறனாய்வு செய்து M. Litt. பட்டம் பெற்றவர்.

**அழகப்பன். இராம. சுப.**

ஆசிரியர், சுப்பிரமணியன் செட்டியார் குருகுல உயர்நிலைப் பள்ளி, அமராவதி புதூர் அஞ்சல், இராமநாதபுர மாவட்டம்.

பு. பெ: அழகாபுரி அழகப்பன். பி: பி. அழகாபுரி, திருச்சி மாவட்டம். *20-1-1936*. அ. பி. மொ: ஆங்கிலம். ஒன்பது ஆண்டுகளாக சிறுகதை, அறிவியல், பிரயாணம், சிறுவர் இலக்கியம் ஆகிய துறைகளில் எழுதி வருகிறார்.

**அழகப்பன். வி.**

*டி 154*, சினிமா சாலை, பகுதி-*18*, நெய்வேலி-*3*.

பு. பெ. எழில் மதியன். பி: காரைக்குடி, இராமநாதபுர மாவட்டம் *27-6-1940*. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. *1952* முதல் கவிதை, கட்டுரை, சிறுகதை எழுதிவருகிறார். நெய்வேலிக் கலை இலக்கிய மன்றத் தலைவர்.

**அழகர்சாமி. எம்.**

ஜெகதா நிலையம், டால்மியாபுரம் அஞ்சல், திருச்சி மாவட்டம்.

பி: எ. வேலம்பாளையம், கோவை மாவட்டம், *14-11-1938*. அ. பி. மொ: தெலுங்கு. நூல்: வாழ்வதற்கு வழிசெய் *1962*(நாவல்), அழகர்சாமி சிறுகதைகள் *1965*(சிறு கதை).

அழகனூர்.

மாச்சம்பாளையம், போத்தனூர், கோவை மாவட்டம்.

பு. பெ: அன்பெழில். பி: 1938. அ. பி. மொ: மலையாளம். நூல்: கொக்கரக்கோ (சிறுவர் கவிதை)

அழகிரிசாமி கு.

20, செங்கல்வராய முதலி தெரு, சென்னை-5.

பு. பெ: ஸரஸாங்கி, ஜி. செல்லையா, குவளை. பி: இடைசெவல், திருநெல்வேலி மாவட்டம் 9-6-1923. அ. பி.மொ: ஆங்கிலம். நூல்: அழகிரிசாமி கதைகள் 1952, கற்பக விருட்சம் 1965 (இரண்டும் சிறுகதை), கவிச்சக்கரவர்த்தி 1963(நாடகம்), தமிழ் தந்த கவியமுதம் 1962 (கட்டுரை), மூன்று பிள்ளைகள் (சிறுவர் நூல்) முதலிய 17. மொ. பெ: ஆரோக்கியத் திறவுகோல் (Key to Health), இயற்கை வைத்தியமும் ராமநாமமும் (Nature cure and Ramanama) லெனினுடன் சிலநாட்கள் (Days with Lenin) முதலிய 11. பதிப்பித்தவை: கம்பராமாயணம் (3 பாகங்கள்), அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்து. 'சக்தி' மாத இதழ் ஆசிரியர் (1947-52). மலாயா 'தமிழ் நேசன்' தின இதழ் ஆசிரியர் (1952-57).காந்திஜி நூல் வெளியீட்டுக் கழகத் துணையாசிரியர் (1958-60). 'நவசக்தி' தின இதழ் உதவி ஆசிரியர் (1960-65) கவிச்சக்கரவர்த்தி', 'வஞ்சமகள்', 'வைகுண்டத்தில் வால்மீகி—கம்பர்', 'வாழ்வில் வசந்தம்' ஆகிய மேடை நாடகங்களின் ஆசிரியர், 'முக்கூடல் பள்ளு', 'வில்லி பரதம்' நாட்டிய நாடகங்களைத் தயாரித்து அரங்கேற்றியவர். சில சிறு கதைகள் ஆங்கிலம், ருஷ்ய, செக், இந்தி, குஜராத்தி மொழிகளில் வெளியாகியுள்ளன. மலேஷியாவில் அரசியல் சாஸன பூர்வமாக கல்வித்துறையில் தமிழுக்குச் சம அந்தஸ்து வேண்டுமென்று 'தமிழ் நேசன்' வாயிலாகப் பல மாதங்கள் போராடி வெற்றி பெற்றவர். இசைக்கலை பயின்றவர். ஓவியம் வரையும் ஆற்றல் பெற்றவர்.

அழகேசன். பா.

9/16, ராமலிங்கேஸ்வரர் கோயில் வீதி, சென்னை-18.

பி: வீரானந்தல், வடார்க்காடு மாவட்டம், 28-2-1930. அ. பி. மொ: ஆங்கிலம், தெலுங்கு. நூல்: அழியட்டுமே ஆண்கள் 1957 (நாடகம்).

அளகேசன். ஒ. வி.

வேதாசல நகர், செங்கற்பட்டு.

பி: அரசர்கோயில், செங்கற்பட்டு மாவட்டம், 6-9-1911. அ. பி. மொ: ஆங்கிலம், சமஸ்கிருதம், இந்தி, மொழி பெயர்ப்பு: உலக சரித்திரம் (Glimpses of World History) மத்திய அரசாங்க அமைச்சர்.

அறவாழி. மாரி

29, கோவிந்தசாமிப் பிள்ளைத் தெரு, அஸ்தம்பட்டி, சேலம்-7.

பி: 2-6-1935. அ. பி. மொ: ஆங்கிலம். 12 ஆண்டுகளாகச் சிறுகதை, நாவல், நாடகம் எழுதிவருகிறுர்.

**அனுசுயா தேவி.**
ஆசிரியை, ப. யூ. ஆரம்பப்பள்ளி, பேரூர், கோவை.
பு. பெ: நெருப்புக்கனி. பி: 20-8-39. சிறு கதாசிரியர்.

**அன்பரசன். மு. புலவர்**
11, கிரேசு கார்டன், 2-ஆவது தெரு, சென்னே-13.
பி: சென்னே, 21-2-1933. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: தேன் மலர் 1963,(சிறுகதைகள்) இளங்கோ மொழிப் பயிற்சி 1963, இளங்கோ இலக்கணப் பயிற்சி 1965, 'தென்னுடு' என்னும் வார இதழின் துணே ஆசிரியராக இருந்தவர்.

**அன்பழகன். க. M.A.**
10, வெள்ளாளத் தெரு, சென்னே-7.
பி: காட்டூர், தஞ்சை மாவட்டம் 14-12-1922. அ. பி.மொ: ஆங்கிலம். நூல்: அழகரசி 1951 (நாவல்), வகுப்புரிமைப் போராட்டம் 1952, விடுதலேக் கவிஞர் 1952, அறிவும் சிந்தனேயும் 1954 (கட்டுரை),உரிமை வாழ்வு 1955. பச்சையப்பன் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராயிருந்தவர்; தமிழ்நாடு மேல் சபை உறுப்பினர்.

**அன்பு.**
61 C, உஸ்மான் ரோடு, சென்னே-17.
பு. பெ: விவேகன், பாக்கியலக்ஷ்மி, ஜனகன். பி: சுவாமி மலே, தஞ்சை மாவட்டம், 31-5-37. 1953 முதல் சினிமாச் செய்திகளேப் புகைப்படங்களுடன் எழுதி வருகிறுர்.

**அன்பு கணபதி, வித்துவான்.**
26, ஐயாவு நாயுடு தெரு, செனுய் நகர், சென்னே-30.
பு. பெ: தென்றல். பி: பசுபதி கோயில், தஞ்சாவூர் மாவட்டம். 21-8-1917. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: பாவலரும் காவலரும் 1952, செந்தமிழ்ச் செல்வியர் 1956, வீணே வித்தகன் 1960 (மூன்றும் கட்டுரை). பல பாடநூல்களின் ஆசிரியர். 1936ஆம் ஆண்டு முதல் எழுதி வருகிறுர். தமிழ் எழுத்தாளர் சங்கத் தலேவர் (1961, 1962), சென்னேப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், சென்னேத் தமிழாசிரியர் கழகத் தலேவர், மாணவர் மன்றச் செயலாளர்.

**அன்பு வேதாசலம்.**
அன்பு நிலேயம், பட்டுக்கோட்டை.
பு. பெ: அன்பு. பி: பட்டுக்கோட்டை, தஞ்சை மாவட்டம், 1922. அ. பி. மொ: ஆங்கிலம். 1942-ஆம் ஆண்டு விடுதலேப் போராட்டத்தில் சிறைசென்றவர். பத்தாண்டுகளாக எழுதி வருகிறுர்.




# ஆ

**ஆசார்யா. பி. ஸ்ரீ.**

*75*, கஜல் பாங்க் ரோடு, சென்னை-*28*.

பு. பெ: பி. ஸ்ரீ. பி: விட்டலபுரம், திருநெல்வேலி மாவட்டம், *1892*. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம். நூல்: திவ்யப் பிரபந்த சாரம், வீரத் தமிழகம், துள்ளித் திரிகின்ற காலத்திலே, ஞானசிகரம், பாரதி நினைவுகள் முதலிய *60*. தொகுப்பு: Sheaves from the Tamil Muse. இவரது 'ஸ்ரீ ராமானுஜர்' நூல் சாகித்திய அகாதமிப் பரிசு பெற்றது. தமிழ் வரலாற்றுக் கழகப் பதிப்பாசிரியர். தமிழ் எழுத்தாளர் சங்கக் கேடயம் பெற்றவர் (*1959*)

**ஆடவல்லான். முகவை. க.**

*23*, வழிபாட்டுக் கோயில் வீதி, சூளைமேடு, சென்னை-*24*.

பி: முகவை, இராமநாதபுரம் மாவட்டம், *12-5-1939*. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. *1958* முதல் கவிதை, கட்டுரை, ஆய்வு, தொழிலியல், குழந்தை இலக்கியம் முதலிய துறைகளில் எழுதி வருகிறார். மொழி பெயர்ப்புகள் பல புரிந்து வருகிறார்.

**ஆதிமூலன். இரா.**

*4. 1*-ஏ. புதூர், சேலம்-*7*.

பு. பெ: வித்யாபதி, விநய தேவ். பி: தருமபுரி, சேலம் மாவட்டம் *17-9-1934*. *1953* லிருந்து சிறு கதைகள் எழுதி வருபவர்.

**ஆத்மநாதன். ரா.**

நியூ இந்தியா பப்ளிகேஷன்ஸ், *103*. கச்சேரி ரோடு, சென்னை-*4*.

பி: பட்டுக்கோட்டை, தஞ்சை மாவட்டம், *12-11-1912*. அ. பி. மொ: ஆங்கிலம், மராட்டி, தெலுங்கு. நூல்: ஆடும் பாலம் *1941* (சிறு கதை), நடைப்பிணத்தின் நாட்குறிப்புக்கள் *1939* (ஆராய்ச்சி), சிந்தனைக்குச் சில குறிப்புக்கள் *1943* (அறிவியல்). *38* ஆண்டுகளாக எழுதி வருகிறார்.

**ஆரோக்கியசாமி. மு.** M.A., Ph.D

வரலாற்றுத் துறைப் பேராசிரியர், பல்கலைக் கழகம், சென்னை-5.

பி: சோமனூர், கோவை மாவட்டம், *21-7-1911*. அ. பி. மொ: பிரெஞ்சு, இலத்தீன், ஆங்கிலம். நூல்: நாமிருக்கும் நாடு *1951*, தமிழ்நாட்டு வரலாறு *1958*, ஐரோப்பிய வரலாறு-இரு பாகங்கள் *(1961)*. ஆங்கிலத்தில்: Early History of the Vellar Basin *1954*, The Kongu Country, *1956*, The Gangas in the Tamil Country *1956*. 'நாமிருக்கும் நாடு' தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசு பெற்றது.

**ஆரோக்கியசாமி. வே. ஞா.**

*40*, Officers' Colony, Rajaram Mehta Nagar, Madras-*29*.

பி: *1891*. அ.பி. மொ: ஆங்கிலம். மாயூரம் ச. வேதநாயகம் பிள்ளை பேரர்.

**ஆலாலசுந்தரஞ் செட்டியார். பூ.** M.A.

'சிவனகம்', *5/19*, ஆசிரியர் குடியிருப்பு, தாம்பரம், சென்னை-*59*.

பி: சென்னை, *5-11-1907*. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: கட்டுரை விருந்து *1947*, இயற்றமிழ் *1963* (இரண்டும் கட்டுரை). கிறிஸ்தவக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்; மொழித்துறைத் தலைவர். சென்னைப் பல்கலைக் கழக செனட் சபை, அகடமிக் கவுன்சில், தமிழகப் புலவர் குழு உறுப்பினர். அண்ணாமலைப் பல்கலைக் கழகம், வெங்கடேஸ்வராப் பல்கலைக் கழகம் முதலியவற்றின் கல்விக் குழு உறுப்பினர்.

**ஆறுமுக செட்டியார். இ. மு. வித்துவான்**

*10*, வீரராகவன் ரோடு, புதுவண்ணை, சென்னை-*21*.

பி: இலைப்பாக்கம், செங்கற்பட்டு மாவட்டம், *6-3-1910*. நூல்: செந்தமிழ்க் கதைகள் *1950*, கடைச் சங்கப் புலவர் *1954*, செந்தமிழ் வளர்த்த சேரர் *1951*, இன்சுவைக் கனிகள் *1953*, உழைப்பால் உயர்ந்தோர் *1954* முதலிய *19*.

**ஆறுமுக முதலியார், சரவண.** M.A., B.O.L., L.T.

முதல்வர், ஓரியண்டல் கல்லூரி, பழனி, மதுரை மாவட்டம்.

பி: அன்பில், லாலுகுடி வட்டம், *13-8-1907*. அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம். நூல்: தமிழ் கற்பிக்கும் முறைகள், கட்டுரைக் கருவூலம், திருக்குறளும் பொது நோக்கமும், இலக்கிய ஓவியங்கள்.

**ஆறுமுகம். கி.**

கிருட்டினராயபுரம் அஞ்சல், குளித்தலை வட்டம், திருச்சி மாவட்டம்.

பு. பெ: குழந்தைதாசன். பி: கிருட்டினராயபுரம், திருச்சி மாவட்டம், *14-6-1926*. நாடகத் துறையில் ஈடுபாடுடையவர்.

ஆறுமுகம். எஸ்.

எழுத்தர், பவானி மில், போத்தனூர்.

பு. பெ: பொன்னன். பி: திருநெல்வேலி, 3-4-1934. அ. பி. மொ: ஆங்கிலம். கடந்த எட்டாண்டுகளாக சிறுவர் இலக்கியமும் சிறுகதைகளும் எழுதிவருபவர். வளரும் எழுத்தாளர் சங்கத்தின் துணைச் செயலாளர் (1957).

ஆறுமுகம். எஸ். பூவை. B. A.

பூவை மாநகர் அஞ்சல், தஞ்சை மாவட்டம்.

பு. பெ: கார்த்திகை பாலன், பூவை, பைரவி, இளையபிரான், மறைநாயகன், பிறைசூடி. பி: பூவை மாநகர், தஞ்சை மாவட்டம். 30-1-1928. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: பூவையின் கதைகள் 1962 (சிறுகதை), கல்கி முதல் அகிலன் வரை 1963 (திறனாய்வு), பத்தினித் தெய்வம் 1963 (நவீனம்), தென்னாட்டுக் காந்தி 1966 (கட்டுரை), தாயின் மணிக்கொடி 1966 (சிறுவர் நவீனம்) முதலிய 26. ஆனந்த விகடன் 1961-இல் நடத்திய நாடகப் போட்டியில் 'மகுடி' என்ற ஓரங்க நாடகம் முதற்பரிசு பெற்றது. 'பூவையின் கதைகள்' தமிழக அரசினர் பரிசு பெற்றது. 'உமா'வின் பொறுப்பாசிரியராக 1954—1963-இல் பணியாற்றியவர்.

ஆறுமுகம். சோம. இர.

2/59, பழையூர், பா. நா. பாளையம், கோவை-1.

பி: கோவை: 5-1-1933. நூல்: பறந்ததே பைங்கிளி 1964. (சிறுகதைத் தொகுதி).

ஆறுமுகம். நா.

தமிழ் விரிவுரையாளர், பச்சையப்பன் கல்லூரி, காஞ்சி புரம்.

பு. பெ: செவ்வேள். பி: அய்யன்பேட்டை (காஞ்சிபுரம்), செங்கற்பட்டு மாவட்டம், 15-6-1934. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: மனோன்மணீயம் வினாவிடைகள் 1964.

ஆறுமுகம். ரா.

பழையபேட்டை, திருநெல்வேலி-6.

பு. பெ: தென்முகன். பி: கொட்டாம்பட்டி, மதுரை. 27-9-1915. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: விடிவெள்ளி 1944, நீறுபூத்த நெருப்பு 1947 (இரண்டும் சிறு கதை), பொனவண்டு 1951 (நாவல்), 'முச்சந்தி' 1964 (சரித்திர நாவல்). மொ. பெ: அவமானச் சின்னம், நாநாவின் தாய் 1953 (நாவல்), முதலிய 15 நூல். 1955 'கல்கி' சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்றவர். சுமார் 500 வானொலி நாடகங்கள் எழுதியிருக்கிறார். வானொலி நிலைய எழுத்தாளரும் அறிவிப்பாளரும்.

ஆறுமுகன். க. அ. வித்துவான்

பாரதி படிப்பகம், இராமலிங்கம்பட்டி, காமாட்சிபுரம் அஞ்சல், ரெட்டியார் சத்திரம் வழி, மதுரை மாவட்டம்.

பு. பெ: செம்பிநாடன், தமிழ்மகன். பி: இராமலிங்கம்பட்டி 4-12-1906. நூல்: தமிழகத்தின் கலைமணிகள் 1959. முத்தமிழ் மணிமாலை 1963. (இரண்டும் கவிதை). விடுதலைப் போராட்டத்தில் பங்குகொண்டு இருமுறை சிறை சென்றவர்.

**ஆனந்தி ராமச்சந்திரன்**

20 - B, கிரீன்வேஸ் ரோடு, சென்னை 28.

பி: சென்னை 8-4-1933. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: அமரதாரா, மலைச்சாரல் மாதவி (நாவல்கள்). 'கல்கி'யின் புதல்வி.







**இக்னேஷியஸ் இருதயம். மறைத்திரு. சே. ச.**
இலோயோலாக் கல்லூரி, சென்னை-34.
பி: இடைக்காட்டூர், இராமநாதபுரம் மாவட்டம், 19-1-1910. அ. பி. மொ: ஆங்கிலம், பிரெஞ்சு, இலத்தீன், கிரீக். நூல்: பங்கிராஸ் அல்லது இளமையின் மகிழ்ச்சி 1963, வேள்வித்தீ 1964 (இரண்டும் நாடகம்), கனவோ நனவோ ? 1958 (குறுநாவல்). சைவ சித்தாந்தம் பற்றி ஆங்கிலத்தில் கட்டுரைகள் எழுதியுள்ளார். தத்துவ ஆசிரியர்.

**இந்திரா. தி. B. A.**
9, Shankar Niketan, Central Avenue Road, Chembur, Bombay-71.
பு. பெ: ஸ்ம்ருதி. பி: தேவகோட்டை, ராமநாதபுர மாவட்டம், 31-12-1938. அ. பி. மொ: ஆங்கிலம், ஹிந்தி. 'லட்சியப் பாதை' என்ற நாவல் 'கலைமகள்' நாராயணசாமி ஐயர் பரிசு பெற்றுள்ளது;

**இம்மானுவேல் பாஸ்கரன். டி. M.A.**
சந்திர விலாஸ், கென்னட் ரோடு, மதுரை-10.
பி: கோவை மாவட்டம், 1-5-1939. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: நவீன லேவாதேவி முறை 1964, கிராமியப் பொருளாதாரம் 1964. விரிவுரையாளர்.

**இரத்தின. மணவாளன். புலவர்**
இளங்காடு (அஞ்சல்), திருக்காட்டுப் பள்ளி (வழி), தஞ்சை மாவட்டம்.
பு. பெ: புலவர் இளசை. மணாளன். பி: இளங்காடு, தஞ்சை மாவட்டம், 15-3-1936. அ. பி. மொ: ஆங்கிலம். 1958 முதல் கவிதை, நாடகம் எழுதி வருபவர்.

**இரத்தினம். கா. பொ .பண்டிதர், B.A. (HONS) Lond., M.A., B.O.L.,**
கிளிநொச்சி, இலங்கை
பி: வேலணை, இலங்கை, 10-3-1914. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம். நூல்: இலங்கையில் இன்பத்

தமிழ் 1956 (வரலாறு), இலக்கியங் கற்பித்தல் 1960 (ஆராய்ச்சி), தாவரமில்லே—சமய ஆராய்ச்சி 1955. நூற்றுண்டுகளில் தமிழ் 1961, எழுத்தாளர் கல்கி 1966. கொழும்பு எழுத்தாளர் மன்றம், உலகத் தமிழ் மன்றம், தமிழ் மறைக் கழகம் ஆகியவற்றின் தலைவர். இலங்கைப் பாராளுமன்ற உறுப்பினர்.

**இரத்தினவேல். து.**

4, மகால் ஏழாம் தெரு, மதுரை.

பி: கோப்பநாயக்கன் பட்டி, இராமநாதபுரம் மாவட்டம், 6-8-1935. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: கலேஞனின் குழந்தை 1965 (சிறுகதை). 1956 முதல் சிறுகதை எழுதி வருகிறார்.

**இரத்தினவேலு. மா.**

5, மந்தைவெளி தெரு, சென்னே-28.

பி: திருமயிலே, 6-2-1923. அ. பி. மொ: ஆங்கிலம். 15 ஆண்டுகளாக நாடகம், கவிதை, சிறுகதை, கட்டுரை எழுதி வருபவர். வானெலி நாடக ஆசிரியர்.

**இராகவன். என்.**

6, ஹிபர் ரோடு, பீமநகர், திருச்சி-1.

பி: நாங்குனேரி, திருநெல்வேலி மாவட்டம், 25-6-1916. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: செங்கரும்பு 1959 (கவிதை), பணம் பத்திரம் 1959 (நாடகம்), அவளும் அவனும் 1961 (கட்டுரை). திருச்சி அகில இந்திய வானெலி நிலேயப் பிரதம எழுத்தாளர். 'நாம் இருவர்', 'வேதாள உலகம்' ஆகிய திரைப்படங்களுக்குப் பாடல்கள் இயற்றியுள்ளார். பல மேடை நாடகங்களின் ஆசிரியர். பல கவியரங்குகளில் பங்கு பெற்றவர். பல கவிதை நாடகத் தொகுதிகளிலும் இவரது படைப்புகள் இடம் பெற்றுள்ளன.

**இராகவன். டி. சி.**

43/A, சைடன் ஹாம்ஸ் ரோட், பெரியமேடு. சென்னே-3.

பு. பெ: வானம்—ராகவன். பி: அரிகலம்பாடி, வ. ஆ. மாவட்டம், 18-5-1914, அ. பி. மொ: தெலுங்கு. நூல்: மன்மதன் கோட்டை 1953, காதல் பலி 1955 (நாடகம்). 1944—49-ல் 'ஜெயவாணி' வார இதழ் நடத்தியவர், 'வான மண்டலம்' என்ற பத்திரிகையை நடத்தி வருபவர்.

**இராசமாணிக்கஞர். மா. M.A., L.T., M.O.L., Ph.D.**

1/15 இப்ரகிம்ஜி சாயபு முதல் சந்து, சென்னே-1.

பி: கர்நூல், ஆந்திரப் பிரதேசம், 12-3-1907. அ. பி. மொ: ஆங்கிலம், தெலுங்கு. நூல்: பல்லவர் வரலாறு 1945, நாட்டுக்கு நல்லவை (நாவல்), சைவ சமய வளர்ச்சி 1959, பெரிய புராண ஆராய்ச்சி 1960, தமிழர் திருமணத்தில் தாலி 1955 முதலியன. மதுரை எழுத்தாளர் மன்றத் தலைவர் (1958-59), தமிழ் ரீடர் (Reader in Tamil), சென்னேப் பல்கலேக் கழகம்.

**இராசாராம். வி. திருச்சி.**

*சேஷசாயி காகித ஆலை, காவேரி (அ), ஈரோடு-7.*

*பி: திருச்சிராப்பள்ளி, 3-9-1933. அ. பி. மொ: ஆங்கிலம். நாடகத் துறையில் பெரிதும் ஈடுபாடுள்ள இவர் கடந்த 12 ஆண்டுகளாக கட்டுரைகளும் எழுதி வருகிறார். முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதத்தின் புதல்வர்.*

**இராசவேல். நா.**

*7-A, வைகுண்ட வாத்தியார் தெரு, சென்னை-1.*

*பு. பெ: நாவரசு. பி: பண்ணுருட்டி, தென்னார்க்காடு மாவட்டம், 30-12-1917. நூல்: ராஜிநாமா 1948 (நாடகம்), பாரதிதாசனின் பண்புகள் 1951 (கட்டுரை), பழி 1950 (சிறுகதை), நடித்துப் பார் 1954 (ஓரங்க நாடகம்) முதலியன. பல திரைப் படங்களுக்குப் பாடல்கள் எழுதியுள்ளார். 'பைங்கிளி' திங்கள் ஏட்டின் ஆசிரியர்.*

**இராசாமணி. க.**

*8A/294, சோமசுந்தரம் லே அவுட், காந்திபுரம் No. 7 எக்ஸ்டன்ஷன், கோவை-12.*

*பி: கோவை மாவட்டம். 7-1-1942. சிறுகதை எழுத்தாளர்.*

**இராதா. அ. (இராதாகிருட்டினன்)**

*385, நேதாஜி வீதி, ஈரோடு.*

*பி: ஈரோடு, கோவை மாவட்டம், 3-2-34. அ. பி. மொ: ஆங்கிலம். 1958-லிருந்து எழுதி வருகிறார். நவமணி, அவள் வாழ்வு, அல்லி ஆகிய நாடகங்கள் எழுதி அரங்கேற்றி நாடகங்களுக்குப் பாடல்களும் இயற்றியுள்ளார்.*

**இராதாகிருஷ்ண சர்மா சல்லா.** M.A., M.Litt.

*5. நாகார்ஜுன நகர், கோடம்பாக்கம், சென்னை-24.*

*பு. பெ: கிருஷ்ண. பி: சோமவரப்பாடு, ஆந்திரப் பிரதேசம் 6-1-1929. அ. பி. மொ: தெலுங்கு. நூல்: ஆயிரம் தலை நாகம் 1962 (நாவல்), திருப்பதி வெங்கடேச்வரம் 1964 (கதை). இவர் தெலுங்கிலும் நூல் எழுதியுள்ளார்.* English-Telugu Dictionary *தொகுத்துள்ளார்.*

**இராதாமணாளன். கே. ஜி.**

*C-528, கோடம்பாக்கம் புதூர், சென்னை-33.*

*பி: கண்டியநல்லூர், வடார்க்காடு மாவட்டம், 15-6-1925. நூல்: வீணை (நாவல்), கல்லறைக் குயில், சிந்தனையாளர் இங்கர்சால் (வரலாறு), பூக்குடலை (கதை), அரக்கு மாளிகை (நாடகம்) முதலிய 26. மொழி பெயர்ப்பு: விடுதலைப் பாதை* (Freedom Road by Howard Fast), *பிணச்சாம்பல். சிங்கப்பூர் 'தமிழ் மலர்' தமிழகப் பிரதிநிதி. பல திரைப் படங்களுக்குக் கதை வசனம் எழுதியிருக்கிறார்.*

**இராதாமாணிக்கம். டேப்**

*14, ஜமால் சவுக்கார் சந்து, சென்னை-21.*

பி: சென்னை, 30-6-1930. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: பத்தாயிரம் 1953 (இலக்கிய நாடகம்), பாண்டியன் பரிசு 1953 (சிறுகதை), கோபுரக் கலசம் 1957 (நாவல்), கலையே வா (கவிதை) திரைப்படக் கவிஞர்.

**இராமகிருட்டினன். கு. M.A.**

தமிழ்த்துறை, து. கோ. வைணவக் கல்லூரி, சென்னை-29.

பு. பெ: நற்றமிழன். பி: புலியனூர், தென்னார்க்காடு மாவட்டம், 10-5-1938. அ. பி. மொ: ஆங்கிலம், பிரெஞ்சு. மொ. பெ: சத்திய சாய் பாபா 1964 (Sri Sathya Sai baba by Sathidasan). கலைக் களஞ்சியத்தில் ஓராண்டு துணையாசிரியராக இருந்தவர். தமிழ் எழுத்தாளர் சங்கத் துணைச் செயலாளர்—1965, 66.

**இராமகிருஷ்ணன். எஸ்.**

*29, காக்காத் தோப்புத் தெரு, மதுரை 1.*

பி: கி(ள்)ளி மங்கலம், தஞ்சை மாவட்டம். 2-4-1921. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: கம்பனும் மில்டனும், சிறியன சிந்தியாதான், கற்பின் கனலி, இளங்கோவின் பாத்திரப் படைப்பு, கம்பன் கண்ட அரசியல் (ஐந்தும் இலக்கியத் திறனாய்வு) முதலிய 20. மொ. பெ: சக்கரவர்த்தி பீட்டர் (ருஷ்ய நாவல்), வித்யா (ருஷ்யக் கதை) ரசாயன மூலகங்கள் முதலியன.

**இராமகிருஷ்ணன். மூ. வித்துவான்**

தமிழாசிரியர், வாசுகி மகளிர் உயர்நிலைப் பள்ளி, திருவொற்றியூர், சென்னை-19.

பி: ஸ்ரீ வைகுண்டம், 1-9-1932, அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. நூல்: பிரதிபேத ஆராய்ச்சி 1961, பரிபாடல் ஆராய்ச்சியும் அதன் இலக்கண நிலையும், தமிழும் இந்தியும், 1500 ஆண்டு நாட்காட்டி, எளிதில் இலக்கணம் கற்க வேண்டுமா? திருவொற்றியூரில் 'உலக சாந்தி ஆசிரமம்' அமைத்துள்ளார்.

**இராமச்சந்திரன். கோ. M.A.**

*28, செட்டித் தெரு, சின்னக் காஞ்சீபுரம்.*

பி: நந்தம்பாக்கம், செங்கற்பட்டு மாவட்டம், 26-1-1927. அ. பி. மொ: ஆங்கிலம், தெலுங்கு. நூல்: பிறமொழிகளில் தமிழ்ச்சொல் ஆட்சி 1966. கடந்த ஆறாண்டுகளாக அறிவியல் கட்டுரைகள் எழுதி வருகிறார்.

**இராமசாமி. ஆர். M.SC.**

சோழசிராமணி P.o, திருச்செங்கோடு வழி, சேலம்.

பு. பெ: சம்பு. பி: சோழசிராமணி, 25-2-1935. அ. பி. மொ: ஆங்கிலம். மொ. பெ: காற்றுப் பெருங்கடல் 1964; கோவை பூ. சா. கோ. கலைக்கல்லூரி விரிவுரையாளர்.

**நாகராசன். மா.**

*13*, அஷ்டபுஜம், வடவண்டை மாடவீதி, காஞ்சிபுரம்.

பு. பெ: காஞ்சி, மாணி, நாகவேந்தன். பி. காஞ்சிபுரம், செங்கற்பட்டு மாவட்டம், *1-7-1938*. *1960* முதல் சிறு கதை, நாடகம், சிறுவர் இலக்கியம் எழுதி வருகிருர். இருள் அகன்றது, நெஞ்சிலே நெருப்பு முதலிய மேடை நாடகங் களின் ஆசிரியர்.

**நாகராஜன். எஸ்.** B.SC., (HONS), M.A.

பேராசிரியர், R.D.M. கல்லூரி, சிவகங்கை.

பி: திருவண்ணுமலே, வ. ஆ. மாவட்டம், *15-11-1926*. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்க்ருதம், ஹிந்தி. நூல்: கடல் நீரில் ஒளி *1966* (அறிவியல்). *1946* முதல் அறிவியல் கட்டுரைகள் எழுதி வருகிருர்.

**நாகராஜன். ஏ. பி.**

*62/2*, மௌபரீஸ் ரோடு, சென்னே-*18*.

பி: அக்கம்மா பேட்டை, சேலம் மாவட்டம், *24-2-1928*. நூல்: தண்டனேக்குத் தப்பியவர்கள், மாமல்லபுரத்தில் மங்கையும் சிற்பியும், திருமுறை யாத்திரை. திரைப்படக் கதாசிரியர், வசனகர்த்தா, இயக்குநர்.

**நாகராஜன். கே. எஸ்.** M.A.

*59*, தெற்குத் தேர்த் தெரு, திருநெல்வேலி-*6*.

பி: காவேரிப்பட்டினம், சேலம் மாவட்டம், *9-12-1927*. அ. பி. மொ: ஆங்கிலம், கன்னடம், தெலுங்கு. நூல்: கல்வியின் மறுமலர்ச்சி *1949* (கல்வி), தமிழ்க் குரல் *1951* (கட்டுரை), கிருஷ்ண தேவராயர் *1952* (வாழ்க்கை), விஞ் ஞான வாழ்வு *1952* (வாழ்க்கை), நாளும் முழங்குவோம் *1960* (கவிதை) முதலிய *14*. ஆங்கிலத்தில்: Tales of Ind *1954*, Tales of All Time *1955*, Tales for the Young *1960*. மொ. பெ: மகான் துர்க்கா சரண நாகர், கோண்டிகி, கொலம்பஸ். 'கல்வி' என்னும் நூல் சென்னே அரசினர் பரிசு பெற்றது.

**நாகராஜன். வ. சா.**

*14*, மகாதேவய்யர் தெரு, சென்னே-*33*.

பி: வடகுடி, நன்னிலம் தாலுகா, தஞ்சை மாவட்டம், *1930*. நூற்றுக்கு மேற்பட்ட சிறுகதைகளே எழுதியிருக் கிருர்.

**நாகலிங்கம். ரா. மு.**

*14*, திருகோணமலே வீதி, கண்டி, இலங்கை.

பி: பரத்தவயல், இராமநாதபுர மாவட்டம், *20-4-1923*. அ. பி. மொ: சிங்களம். *1949* முதல் சிறுகதை, கட்டுரை எழுதி வருகிருர். ஈழத்தில் 'செய்தி' வார இதழைத் தொடங்கி நடத்தி வருகிருர்.

**நாகு. ஆர். கே.** M.A., Ph.D,

3, அருணாசல கிராமணி தெரு, சென்னை-30.

பி: இராணி சேதுபுரம், இராமநாதபுர மாவட்டம், 15-6-1937. அ. பி. மொ: ஆங்கிலம், பிரஞ்சு. 1960 முதல் கட்டுரை எழுதி வருகிறார். சங்க இலக்கியத்தில் 'பாலைத் திணை' குறித்து ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டம் பெற்றவர்.

**நாகையன். என்.**

'நவ இந்தியா' நாளிதழ், பீளமேடு, கோவை-4.

பு. பெ: நகுலன். பி: அரசூர், உடுமலை, 1931. பல ஆண்டு களாகக் கட்டுரைகள் எழுதி வருகிறார்.

**நாச்சியப்பன். நாரா.**

202, ஜானி ஜான்கான் ரோடு, சென்னை-14.

பு. பெ: அம்மான். பி: ஆ. முத்துப்பட்டணம், ஆத்தங்குடி p.o. இராமநாதபுர மாவட்டம், 1927. அ. பி. மொ: ஆங் கிலம். நூல்: சிறுவர் பாட்டு 1950, மூன்றாவது இளவரசன் 1949, சவுக்கடி தர்பார் 1950 (இரண்டும் சிறுவர் கதை), கொய்யாக் காதல் 1948 (காவியம்) முதலிய 26. இவர் 'பொன்னி', 'தென்றல்', பத்திரிகைகளின் துணை ஆசிரிய ராகவும், 'முத்து' என்ற சிறுவர் பத்திரிகையின் ஆசிரிய ராகவும் பணியாற்றி இருக்கிறார்.

**நாதன். எஸ். வி.** B.A.

100, அப்பர்சாமி கோவில் தெரு, சென்னை-4.

பி: திருவாளப்புத்தூர், தஞ்சை மாவட்டம், 14-7-1925. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: இடம் கிடைத்தது 1966 (குழந்தை இலக்கியம்).

**நாராயணசாமி. அன்பு. த.**

1/3, வடமலை மேஸ்திரி தெரு, சென்னை-1.

பு. பெ: அன்பு. பி: கீழ்பென்னாத்தூர். வ. ஆ. மாவட்டம், 4-9-1939. அ. பி. மொ: ஆங்கிலம், தெலுங்கு. 1956-லிருந்து சிறுகதை, கட்டுரை எழுதி வருகிறார்.

**நாராயணசாமி. கை.**

23/3, ரெயில்வே காலனி, நாகை.

பு. பெ: மாயா. பி: திருவாரூர், தஞ்சை மாவட்டம், 5-6-1925. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. நூல்: மணப் பந்தல் 1965, பெண்மை வாழ்ந்தது 1965 (இரண்டும் சிறு கதை). 'கல்கி' சிறுகதைப் போட்டி (1955)—ல் பரிசு பெற்றவர்.

**நாராயணசாமி. ப.**

4/70, வடக்கு மாடவீதி, திருநின்றவூர், செங்கற்பட்டு மாவட்டம்.

பு. பெ: வைசாகன், பச்சை. பி: உத்தமதானபுரம், தஞ்சை

மாவட்டம், 1926. அ. பி. மொ: ஆங்கிலம். 1948 முதல் கட்டுரை, ஆராய்ச்சி எழுதி வருகிறார்.

**நாராயணசாமி சேனைநாட்டார். ப. கி.**

ஆசிரியர், இடையிருப்பு அஞ்சல், பாபநாசம் தாலூகா, தஞ்சை மாவட்டம்.

பி: பள்ளியூர், தஞ்சை, செப்டம்பர், 1912. நூல்: புதுமை இயக்கம் 1960 (கவிதை), மக்கள் தாலாட்டு 1962 (கவிதை).

**நாராயணசாமி பாரதி. தி. பொ. வித்துவான்.**

தலைமைத் தமிழாசிரியர், அரசினர் உயர்நிலைப்பள்ளி, உத்தமபாளையம்.

பு. பெ: நாதி. பி: கோம்பை, மதுரை மாவட்டம், 2-11-1919. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: உம் பிள்ளை படிக்க வழி 1949, காவேரி என் காதலி 1954 (இரண்டும் கவிதை), கல்வி வளர்க 1959, கல்வி ஓங்குக 1959 (இரண்டும் கட்டுரை). சென்னை அரசினர் நடத்திய முதியோர் இலக்கியப் பண்ணையிலும், சிறுவர் இலக்கியப் பண்ணையிலும் பயிற்சி பெற்றவர்.

**நாராயணன். அ. பொ.**

மே/பா, பரணி ஓட்டல், சேலம்-1.

பு. பெ: நாரா, இன்பதாசன், கலைமணி. பி: வீரமாணிக்கம், திருநெல்வேலி மாவட்டம், 6-5-1943. அ. பி. மொ: ஆங்கிலம். சுமார் 250 பாடல்கள் எழுதியிருக்கிறார். சேலம் 'மாலை முரசு' உதவி ஆசிரியர்.

**நாராயணன். அறந்தை. மு.**

4, பாரதீஸ்வரர் காலனி, 4-வது தெரு, சென்னை-24.

பு. பெ: மாலவன், எமன். பி: அறந்தாங்கி, தஞ்சை மாவட்டம், 20-6-1937. அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம். 13 ஆண்டுகளாகச் சிறுகதை, நாடகம், கட்டுரை எழுதி வருகிறார். தமிழ் நாடு கலை இலக்கியப் பெருமன்றத்தின் சென்னை மாவட்டக் குழுச் செயலாளர். 'கல்பனா' என்ற கலை இலக்கிய இதழை ஓராண்டு நடத்தியவர். 'ஜனசக்தி' துணையாசிரியர்.

**நாராயணன். இராம. புலவர்.**

20, பெருமாள் கோவில் வீதி, பெத்தநாயக்கன் பாளையம் P.O. சேலம் மாவட்டம்.

பு. பெ: அருள் வண்ணன், தமிழ்ச்சுடரோன். பி: பேராவூரணி, தஞ்சை மாவட்டம், 19-7-1929. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: நண்பன் 1951, வள்ளுவர் காட்டிய வழி 1962 (இரண்டும் கவிதைகள்), கவிதை பாடலாம் 1960 (இலக்கணம்), முயற்சியும் முன்னேற்றமும் 1958 (கட்டுரை), பாரி மன்னன் 1959 (சிறுவர் இலக்கியம்) முதலிய 10.

**நாராயணன். எஸ். B.A.**

*12A/31*, W.A. (Ground Floor), New Delhi-5.

பு. பெ: தமிழன். பி: கும்பகோணம், தஞ்சை மாவட்டம், *1-6-1940*. அ. பி. மொ: ஆங்கிலம், ஹிந்தி, சம்ஸ்கிருதம். *1963*-ல் தில்லித் தமிழ்ச் சங்கம் நடத்திய போட்டியில் சிறு கதை, நாடகம் இரண்டு பிரிவிலும் பரிசு பெற்றவர்.

**நாராயணன். க.**

*100*, பெஸன்ட் சாலே, சென்னே-5.

பி: கோட்டையூர். திருச்சி மாவட்டம், *9-11-1920*. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: வாழ்க்கைத் தோணி *1945*, இலட்சியப் பாதை *1946*, பொன்னரசி *1953*, காதற் புருக்கள் *1956*, ஒரு சரத்தில் இரு மலர்கள் *1963* (ஐந்தும் நாவல்) முதலியன. திரைப்பட இயக்குநர். 'தாய் நாடு' (மாத இதழ்) ஆசிரியர் (*1945—48*).

**நாராயணன். கி.**

7, காந்திபுரம் இரண்டாவது வீதி, தபால் பெட்டி எண் *31*, காரைக்குடி.

பு. பெ: கி. இளங்கோவன். பி: கிழச்சிவல்பட்டி, முகவை மாவட்டம், *29-3-1944*. அ. பி. மொ: ஆங்கிலம். நான்கு ஆண்டுகளாகச் சிறுகதை, நாவல், நாடகம் எழுதி வருகிமுர். சில மேடை நாடகங்களும் எழுதி இருக்கிமுர்.

**நாராயணன். பி. எஸ்.**

*57*, ஜானி ஜான் கான் ரோடு, சென்னே-*14*.

பி: விழுப்புரம், திருநெல்வேலி மாவட்டம், வயது *54*. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: நேதாஜி போஸ், வீர ரஷ்யா (*2* பாகம்). 'தினமணி' உதவி ஆசிரியர்.

**நாராயணன். ரா. B.A., B.L.**

5, இரண்டாவது தெரு, கணபதி காலனி, மதராஸ்-*14*.

பு. பெ: ரா. நா. பி: காரைப்பட்டி கிராமம், திருச்சி மாவட்டம், *23-10-1896*. அ. பி. மொ: ஆங்கிலம். மொ. பெ: அமெரிக்க அரசியலமைப்பு, புது சோவியத் ஏகாதிபத்யம், சமாதானத்தின் புதிய பரிமாணங்கள், எமர்சன் கட்டுரைகள், சுதந்திரப்பாலம் முதலியன. ஆசிரியர்: 'சுதந்திரச் சங்கு' (*1934—35*), 'ஜயபாரதி' (*1935—38*), 'ஹிந்துஸ்தான்' (*1938—49*).

**நீலகண்டன். ப.**

6, கோவர்தன்சிங் தெரு, சென்னே-*14*.

பி: விழுப்புரம், தெ. ஆ. மாவட்டம், *2-10-1916*. அ. பி. மொ: இந்தி, ஆங்கிலம். நூல்: நாம் இருவர், இன்பப் பொழில், கோசலேச் செல்வன், மிதிலேச் செல்வி, மல்லிகைத்

தோட்டம். 'குமரன்' வார இதழின் துணை ஆசிரியராகவும், 'ஜீவமணி', 'விஜயன்' 'இந்திரா' பத்திரிகைகளின் ஆசிரிய ராகவும், 'கலைவாணி' பத்திரிகையின் ஆசிரியர், உரிமையாள ராகவும் இருந்தவர். 'முள்ளில் ரோஜா', 'நாம் இருவர்' முதலிய நாடகங்களின் ஆசிரியர். திரைப்பட இயக்குநர்.

**நீலமணி. கே. பி.**

தினமணி, மவுண்ட்ரோடு, சென்னை-2.

பி: மதுரை, 14-4-1927. அ. பி. மொ: ஆங்கிலம், மலை யாளம். நூல்: ஜீவசாஸனம் 1964 (நாவல்), அகதி (சிறுவர் நாவல்). 'கண்ணன்' நடத்திய சிறுவர் நாவல் போட்டியில் 'அகதி' முதற் பரிசு பெற்றது.

**நீலா ராமமூர்த்தி**

9, சீனிவாசன் தெரு, சென்னை-28.

பு. பெ: நீலு, கானப்ரியா. பி: நாகபட்டினம், தஞ்சை மாவட்டம், ஜனவரி 1923. நூல்: ஸ்துதிமணி மாலை (3 பாகங்கள்). 10க்கு மேற்பட்ட நாவல்களும், 200க்கு மேற் பட்ட சிறுகதைகளும் பத்திரிகைகளில் வெளிவந்திருக் கின்றன.

**நீலாவதி இராம சுப்பிரமணியம்**

9, 2வது குறுக்குச்சாலை, ராஜா அண்ணாமலைபுரம், சென்னை-28.

பி: திருச்சிராப்பள்ளி, 23-1-1913. அ. பி. மொ: தெலுங்கு, இந்தி, ஆங்கிலம். 1928 முதல் கட்டுரைகள் எழுதிவருகிறார். தேச விடுதலைப் போரில் பங்கு கொண்டு சிறை சென்றவர், 'பாக்ய லக்ஷிமி' மாத இதழின் கௌரவ ஆசிரியர்.

**நெல்லையப்பர். பரலி. சு.**

பாரதிபுரம், குரோம்பேட்டை.

பி: பல்லிக்கோட்டை, திருநெல்வேலி மாவட்டம், 18-9-1889. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: வ.உ.சிதம்பரம் பிள்ளை சரித்திரம் 1941, சுவாமி சிவானந்தர் சரித்திரம் 1935. மொ. பெ: வங்கிம் சந்திரர் குட்டிக்கதைகள், ஸ்வர்ண லதா (வங்க நாவல்), இந்திய சுய ராஜ்யம் (காந்திஜி). பழம்பெரும் தேசபக்தர்; பாரதியாரின் நெருங்கிய நண்பர். பாரதியார் பாடலை முதல் முதலாக அச்சிலே கொண்டு வந்தவர். தமிழ் எழுத்தாளர் சங்கத்தால் 1961ல் கேடயம் வழங்கிக் கௌரவிக்கப்பெற்றவர்.

**நெல்லை ராஜன்.**

3, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-34.

பு. பெ: இரா. தமிழ் மகன். பி: டோனாவூர், நெல்லை மாவட்டம், 2-10-1936. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: இளவரசி 1954 (நாடகம்). நீதிமன்றம், ஏழைப் பாடகன், இதய வாசல் போன்ற பல மேடை நாடகங்களின் ஆசிரியர்.

தியாக உள்ளம், தாமரைக்குளம் முதலிய திரைப்படங்களின் வசனகர்த்தா. 'தமிழன்' பத்திரிகையில் துணை ஆசிரியராகப் பணியாற்றியவர்.

**நேசசுதன் அப்பாத்துரை. மா.**

*27, எட்டாம் வீதி, காந்திபுரம், கோவை-12.*

*பு. பெ: சுதன். பி: சென்னை, 6-8-1943. அ. பி. மொ:* ஆங்கிலம், தெலுங்கு. 5 ஆண்டுகளாகச் சிறுகதை, கட்டுரை எழுதி வருகிறார். சுதேசமித்திரன், தமிழ்நாடு, தினமலர் ஆகிய தினசரி பத்திரிகைகளின் கோவை நகரச் செய்தி நிருபராகப் பணிபுரிகிறார்.




# ப

**பகவத்சிங். சு. B.SC.**

24. இராமச்சந்திரபுரம் முதற்சந்து, தெற்கு வெளிவீதி, மதுரை-1.

பு. பெ: முருகபாரதி. பி: மதுரை, 2-2-1944. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. நான்காண்டுகளாகக் கவிதை, கட்டுரை எழுதி வருகிறார். பல இலக்கியப் போட்டிகளில் பரிசு பெற்றவர். மதுரை எழுத்தாளர் மன்றத்தின் துணைச் செயலாளர்.

**பக்கிரி சங்கர். பு. ரா. M.A., B.L.**

5. மீனாட்சி ரோடு, பெரம்பூர், சென்னை-11.

பி: திருவள்ளூர், செங்கற்பட்டு மாவட்டம், 10-10-1925. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: பலநாட்டு அரசியல் அமைப்புகள்1953, அரசியல் கோட்பாடுகள் 1960,சட்டமன்ற நடைமுறை 1963. ஆட்சிமொழி, சட்டக் கமிஷன் செயலாளர், சென்னை.

**பக்கிரிசாமி. ஆர்.**

13, செட்டியார் தெரு, பட்டுக்கோட்டை.

பி: திருத்துறைப் பூண்டி, தஞ்சாவூர் மாவட்டம்,4-2-1943. அ. பி. மொ: ஆங்கிலம். 1959 லிருந்து கவிதை, கட்டுரை சிறு கதை எழுதிவருகிறார்.

**பக்கிரிசாமி. தி. வித்துவான்.**

பெரிய கோட்டை (P.o), சிவகெங்கை (வழி).

பு. பெ: தீபம், ஆடுதுறை வித்துவான்; பி: ஆடுதுறை, தஞ்சைமாவட்டம், 14-6-1936. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: காதல் கதை 1962 (அகப்பொருள் ஆராய்ச்சி).

**பக்கிரிசாமி. வி.**

9, தலையாரித் தெரு, பெரிய காஞ்சிபுரம்.

பு. பெ: திலீபன். பி: நாகப்பட்டினம், தஞ்சை மாவட்டம், 12-6-1932. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: சிறுகதை

உதயம் 1945 (சிறுகதை), மாமா தந்த பரிசு 1945 (சிறுவர் கதை).

**பக்தவத்சலன். கி. மா.**

'சந்திரோதயம்', 8/11B, சிரங்கம்மாள் தெரு, சென்னை-21.

பு. பெ: சந்திரா. பி: சென்னை, 2-6-1927. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: பாரதக் கதைகள் 1961, கண்டு பிடித்தவர் கதை 1962, வாழ்க்கை நலம் 1959 (கட்டுரை), ஒரு லட்சம் 1963, வீரச் சிறுவன் 1964 (இரண்டும் நாடகம்) முதலிய 20. மொ. பெ: ஆலிவர் டுவிஸ்ட், ஏழைபட்டபாடு, மாப சான் கதைகள். 'ஆசிரியர் குரல்' மாத இதழ் ஆசிரியர். இவரது 'அசோகன்' என்ற நாடகம் தமிழகக் கல்வி துறை யினர் பரிசு பெற்றது. குழந்தைஎழுத்தாளர் சங்கத் துணைத் தலைவர் (1963),தமிழ்க் கவிஞர் பெருமன்றப் பொருளாளர் (1965).

**பக்தவத்சலன். கு. வித்துவான்.**

தமிழாசிரியர், தால்மியா உயர்நிலைப்பள்ளி, தால்மியாபுரம், திருச்சி மாவட்டம்.

பு. பெ: பூரட்டாதியான். பி: திருமழபாடி, திருச்சி மாவட்டம், 7-3-1936. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. மூன்றாண்டுகளாகச் சிறுகதை, நாடகம், கவிதை, கட்டுரை கள் எழுதிவருகிறார்.

**பக்தவத்சலம். கெ.**

29, நம்மாழ்வார் தெரு, சென்னை-1.

பி: கெருகம்பாக்கம், செங்கற்பட்டு மாவட்டம், 12-12-1939. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: வேதநாயகர் 1961. தமிழ் எழுத்தாளர் சங்கத் துணைச் செயலாளர் (1964-66), ஒய். எம். சி. ஏ. பட்டிமன்றச் செயலாளர் 1966.

**பக்தவத்சலன். கோ. க.**

8. சன்னதி வீதி, கோவூர், பூவிருந்தவல்லி (வழி), செங்கை மாவட்டம்.

பு. பெ: கோவூர் இசைதாசன். பி: கோவூர், செங்கற்பட்டு மாவட்டம், 9-5-1936. அ. பி. மொ: ஆங்கிலம். ஆறாண்டு களாகக் கவிதை எழுதிவருகிறார்.

**பசுபதி. கே. ஆர்.**

23, ராஜாஜி தெரு, கரூர்.

பி: கரூர், 18-2-1926. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: தென்னாடுடைய சிவன் 1960, மார்க்ஸ் முதல் ஸ்டாலின் வரை 1955.

**பச்சையப்பன். கி. த. புலவர்.**

கே. சி. சங்கரலிங்க நாடார் உயர்நிலைப்பள்ளி, சென்னை-21.

பு. பெ: தமிழ்க் கூத்தன். பி: புதுவை, 23-10-1935. அ. பி. மொ: ஆங்கிலம், பிரஞ்சு, இந்தி. ஏழாண்டுகளாகக் கவிதை, கட்டுரை, கதைகள் எழுதிவருகிறார்.

**பட்டாபிராமன். க.**

மணல் தொழிற்சாலை (P.W.D) எண்ணூர், சென்னை-57.

பி: செருவாவிடுதி, தஞ்சை மாவட்டம், 10-6-1944. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: தமிழ் ஏடுகள் வழிகாட்டி 1966 (தொகுப்பு நூல்). 1965ல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில், தமிழ்ப் பத்திரிகைக் கண்காட்சி நடத்தியவர்.

**பட்டாபிராமன். பி. எம்.**

170, பழைய சப்ஜெயில் தெரு, புதுப்பேட்டை, கிருஷ்ணகிரி.

பு. பெ: பரமன், தமிழ்க்குப்தன். பி: தவுல்தாபாத், தர்மபுரி மாவட்டம். அ. பி. மொ: ஆங்கிலம், தெலுங்கு. நூல்: வாழ்க்கைப் படகு 1944, வாழ்க்கை டைரி 1945, என் கண்ணாட்டி 1945. சேலத்திலிருந்து வெளிவந்த 'பிலிம் ஸ்டார்' இதழின் ஆசிரியராயிருந்தவர்.

**பட்சிராஜன். அ.**

மேலமாடவீதி, ஆழ்வார் திருநகரி, திருநெல்வேலி மாவட்டம்.

பு. பெ: சின்ன ஜெயகாந்தன், குமரி மணாளன், புள்ளரசு. பி: ஆழ்வார் திருநகரி, 18-12-1942. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி, நூல்: பயங்கரப் பாதை 1960 (மர்ம நவீனம்), மங்கல ஒலி 1961, அழுகையும் சிரிப்பும் 1962 (இரண்டும் சிறு கதை).

**பத்மநாபன். ஆர். B.A., B.T.**

41, பி. எம். செட்டி தெரு, சைதாப்பேட், வேலூர், வ. ஆ. மாவட்டம்.

பி: கும்பகோணம், தஞ்சாவூர் மாவட்டம், 1-4-1912. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. நூல்: ஜூலியஸ் ஸீசர் 1954, வீரன் நெப்போலியன் 1958, விஞ்ஞான மேதைகள் 1964, (மூன்றும் வாழ்க்கை வரலாறு), மூன்று வீரர்கள் 1957 (நாவல்), மண்ணும் விண்ணும் 1965 (அறிவியல்) முதலிய 20.

**பத்மநாபன். என். ஆர்.**

கண்டனூர் ரோடு, காரைக்குடி-1.

பி: நாகர் கோயில், குமரி மாவட்டம், 22-10-1909. நூல்: நாட்டின் உயிர்நிலை, கர்மவீரன் கணபதி, மீண்ட இந்தியா, மகாத்மாவின் மணி மொழிகள், சுதந்திரச் சுழல் முதலிய 10. 'விஸ்வ பந்து' (வார இதழ்), 'செட்டி நாடு', (வார இதழ்) துணை ஆசிரியராகவும், 'திருமகள்' (மாதம் இரு முறை) ஆசிரியராகவும் இருந்தவர்.

**பத்மநாபன். பி.**

'இளங்கோ இல்லம்', 67, ஒற்றைவீதி, திருவானைக்காவல், திருச்சி.

பு. பெ: தாமரைச் செல்வன், பி: மாயூரம், தஞ்சை மாவட்

டம் 10-7-1940. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி, தெலுங்கு, 1956 முதல் கவிதை, இசைப்பாடல், கட்டுரைகள் எழுதி வருகிறார்.

**பத்மநாபன். ரா. அ.**

10-ஏ, மூசா சேட்தெரு, தி. நகர். சென்னை-17.

பு. பெ: ஸஞ்சயன், மனோஹர். பி: சாலக்குடி, (கேரளம்) 2-4-1917. அ. பி. மொ: ஆங்கிலம், ஹிந்தி. நூல்: சித்திர பாரதி 1957 (வாழ்க்கை வரலாறு), விஜயன் 1947 (நாடகம்),பாரதி புதையல் இரு தொகுதி 1958(ஆராய்ச்சி). மொ. பெ: தப்பிப் பிழைத்தவர் (One who Survived). பாரதி ஆராய்ச்சிக்காகத் தமிழ் எழுத்தாளர் சங்கத் தங்கப் பதக்கமும் (1965), பாரதியார் சங்கக் கேடயமும் 1962 பெற்றவர். அமெரிக்காவுக்கும், ஐரோப்பாவுக்கும், எகிப்துக்கும் சுற்றுப்பயணம் புரிந்துள்ளார். வானொலித்துறையிலும் பணியாற்றியவர். 'ஆனந்த விகடன்', 'ஹனுமான்', ஹிந்துஸ்தான் பத்திரிகைகளில் உதவியாசிரியராகவும், 'ஜெய பாரதி', 'தினமணி கதிர்' பொறுப்பாசிரியராகவும் பணியாற்றியவர்.

**பத்மனுபன். மு.**

9, நியூபேரன்ஸ் வீதி, பெரம்பூர் பேரக்ஸ், சென்னை-12.

பு. பெ: பண்ணவன். பி: செங்கற்பட்டு, 22-2-1940. அ. பி. மொ: ஆங்கிலம். ஐந்தாண்டுகளாகக் கவிதை எழுதி வருகிறார்.

**பரதன். மே. ச.**

61, ஆச்சாரப்பன் தெரு, சென்னை-1.

பி: ஆரணி, வ. ஆ. மாவட்டம், 5-7-1928. அ. பி. மொ: ஆங்கிலம். புத்தகப் பதிப்புத் தொழிலில் 20 வருட அனுபவமுள்ளவர்.

**பரந்தாமனார். அ. கி. M.A.**

'அல்லி நிலையம்', 18, முத்து முதலிதெரு, புரசை, சென்னை-7.

பி: சென்னை, 15-7-1902. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: நல்ல தமிழ் எழுத வேண்டுமா? 1955 (இலக்கணம்), வாழ்க்கைக் கலை 1955 (கட்டுரை), மதுரை நாயக்கர் வரலாறு 1960 (வரலாறு), மறுமலர்ச்சிக் கவிதைகள் 1958 (கவிதை), திருக்குறளும் புதுமைக் கருத்துக்களும் 1963 முதலிய 13. மதுரை தியாகராசர் கல்லூரி தமிழ் விரிவுரையாளர். 'எங்கள் தோட்டம்' (சிறுவர் பாடல்) மத்திய அரசினரின் சிறுவர் இலக்கியப் பரிசு பெற்றது.

**பரமகுரு. மரு.**

காரைக்குடி நெசவாளர் கூட்டுறவு சங்கம் லிட்; பெருமாள் கோயில் தெற்குத் தெரு, காரைக்குடி-1.

பு. பெ: பரம், மருதன் இறையாசான், பி: சேது ரகுநாத பட்டணம், இராமநாதபுர மாவட்டம், 8-2-1936. பத்து ஆண்டுகளாகக் கவிதை, கட்டுரைகள் எழுதி வருகிறார்.

**பரமசிவானந்தம். அ. மு. வித்துவான். B.O.L. M.A., M.Litt.**

*16*, Reader's Quarters, Hyderabad-*7*.

பி: அங்கம்பாக்கம், செங்கற்பட்டு மாவட்டம், *5-7-1914*. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: தமிழக வரலாறு, சமுதாய மும் பண்பாடும், பத்தொன்பதாம் நூற்றுண்டின் தமிழ் உரை நடை வளர்ச்சி 1965 (ஆராய்ச்சி), தமிழ் உரைநடை (இலக்கிய வரலாறு), வழுவிலா மணிவாசகர் 1966 (நாடகம்) முதலிய *35*. ஆங்கிலத்தில்: The Gleanings of Tamil Culture, Tamilnad Through Ages. 'கூடிவாழ்' இந்திய அரசினர் முதியோர் கல்விப் பரிசும், 'கவிதையும் வாழ்க்கை யும்' சென்னை அரசாங்கப் பரிசும் பெற்றுள்ளன.

**பல்லடம் மாணிக்கம். புலவர்.**

5, சுந்தரேஸ்வரர் தெரு, சென்னை-4.

பி: பல்லடம், கோவை மாவட்டம், *7-5-1936*. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: ஆயிரம் பூ *1960* (கவிதை). வானொலிக் கவியரங்குகளிலும், மேடைக் கவியரங்குகளிலும் பங்கு கொண்டவர்.

**பழநியப்பன். ந.**

*19*, இரண்டாவது மெயின் ரோடு, சி. ஐ. டி. நகர், சென்னை-*35*.

பி: இராமச்சந்திரபுரம், திருச்சி மாவட்டம். அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: மரியாதை ராமன் கதைகள், இராயர் அப்பாஜி கதைகள், தமிழ் நாட்டு அரசர் கதைகள்.

**பழநியப்பன். லெ.**

*34*, பவழக்காரத் தெரு, சென்னை-*1*.

பு. பெ: தமிழ்மாறன். பி: தேவகோட்டை, இராமநாத புர மாவட்டம், *24-2-1934*. அ. பி. மொ: ஆங்கிலம். *14* ஆண்டுகளாக சிறுகதை, நாடகம், கவிதைகள் எழுதி வருகிறார்.

**பழநியாண்டி. சி. ர.**

*80*, திருப்பள்ளித் தெரு, சென்னை-*1*.

பு. பெ: அன்புப் பழம் நீ. பி: சிதம்பரம், தெ. ஆ. மாவட் டம், *13-12-1924*. அ. பி. மொ: தெலுங்கு, ஆங்கிலம். நூல்: தமிழரிடையே அன்புப்போர் *1948*, பேச்சுக்கலை *1950*. பல தமிழறிஞர்களின் சொற்பொழிவுகளைக் குறிப் பெடுத்து நூலாக்கியுள்ளார். ஒய். எம். சி. ஏ. பட்டிமன்ற அமைப்பாளர். பேனு நண்பர்கள் சங்கத் தலைவர்.

**பழனிசாமி. அ. B.A., M.L.**

பேராசிரியர், சட்டக் கல்லூரி, சென்னை-*1*.

பி: செட்டிபாளையம், கோவை மாவட்டம், *15-4-1928*. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: சர்வதேச சட்டம்*1958* (சட் டம்). தமிழ் எழுத்தாளர் சங்கத் துணைத்தலைவராக ஓராண்டு இருந்தவர். சென்னை அரசாங்கச் சட்டச் சொல் அகராதிக்

குழுவின் செயலாளராகவும், கல்லூரிகள், பல்கலைக் கழக ஆசிரியர்கள் சங்கத் தலைவராகவும் (1955—56) பணி யாற்றியவர்.

**பழனிசாமி. க. பெ. B. com.**

ஏ. பி. டி. பார்ஸல் சர்வீஸ், டாக்டர் நஞ்சப்பா சாலை, கோவை.

பு. பெ: சக்திக் கனல். பி: கோவை, 15-7-1931. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: முருகன் புகழ் மாலை 1964 (கவிதை).

**பழனியப்பன். சாமி.**

C/o, குன்றக்குடி அடிகளார், குன்றக்குடி, இராமநாதபுரம் மாவட்டம்.

பி: புதுப்பட்டி, 27-1-1926. நூல்: வள்ளுவர் தந்த காதல் இன்பம் 1955, புகழ்க்கன்னி 1955 (கவிதை), பெர்னுட்ஷா 1955 (வாழ்க்கை), குழந்தை இன்பம் 1956.

**பழனியப்பன். வீர.**

20, மாதவ பெருமாள் கோவில் தெரு, சென்னை-4.

பு. பெ: வீரா, அருணதாசன், கீரன், எம்டன். பி: பட்டுக் கோட்டை, 1926. அ. பி. மொ: ஆங்கிலம், உர்தூ. நூல்: மகளிர் இல்லம் 1966, தெய்வம் பிறந்தது 1965, மனச் சிமிழ் 1965 (மூன்றும் நாவல்), பாரதி கண்ட வாழ்க்கை 1959 (கட்டுரை), மயக்கும் ரோஜாவும் மணக்கும் முல்லை யும் 1958 (நாவல்) முதலிய 14. சுதந்திரப் போராட் டத்தில் பங்கு பெற்றவர்.

**பற்ணபாஸ் ரேக்கின்ஸ். பண்டிட்**

'கலைக் கதிர் நிலையம்', அழிக்கால், கணபதிபுரம் (P.o.), கன்னியாகுமரி மாவட்டம்.

பு. பெ: சுருக்கெழுத்து, பி.ஆர். பி: அழிக்கால், 25-5-1910. அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம். நூல்: ரேக்கின்ஸ் தமிழ் சுருக்கெழுத்து 1936, புனித ஜார்ஜின் பேய் நாகப் போர் 1956 (கவிதை), வெள்ளிமலை திருமுருகன் அருள் வேட்டல் 1966 (கவிதை).

**பன்னீர்செல்வம். கோ. B.sc.**

3/27, இருசப்ப கிராமணித் தெரு, சென்னை-5.

பி: மன்னார்குடி, தஞ்சை மாவட்டம், 10-5-1931. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. பத்து ஆண்டுகளாகக் கட்டுரை, நாடகம், சிறுகதை, எழுதி வருகிறார். 'தினமணி கதிர்' உதவி ஆசிரியராகவும், 'காங்கிரஸ் செய்தி' ஆசிரியராகவும் இருந்தவர். தற்போது 'நெசவாளி' (மாத இதழ்) ஆசிரியர்.

**பன்னீர்ச்செல்வன். தரங்கை.**

'கம்பரில்லம்', விநாயகர் பாளையம், தரங்கம்பாடி, தஞ்சை மாவட்டம்.

பு. பெ: அலைமணற்குழவி, அலை-கணக்காயன். பி: தரங்கம்

பாடி, *15-2-1942*. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. ஐந் தாண்டுகளாகக் கவிதை, கட்டுரைகள் எழுதி வருகிறார்.

**பாக்யலக்ஷ்மி சங்கர்.** B.A., L.T.

C/o. S.B.S. Aiyer, No. 2A/A,, Kavi Kalidas Road, Dehra Dun, U.P.

பு. பெ: பாக்யசங்கர். பி: திருச்சிராப்பள்ளி, *17-6-1910*. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: பிள்ளை மொழி (இரு தொகுதிகள்) *1946, 1953*.

**பாதுர்சா. அ.**

*22*, அஞ்சலகத் தெரு, குறிஞ்சிப்பாடி, கடலூர் வட்டம், தெ. ஆ. மாவட்டம்.

பு. பெ: தமிழ்வண்ணன். பி: கோட்டாறு, கன்னியாகுமரி மாவட்டம், *27-4-1939*. அ. பி. மொ: மலையாளம், அரபி. நூல்: கண் திறந்தது *1963* (நாடகம்), இசை அமுதம் *1965* (கவிதை).

**பாப்பு இராமநாதன். பா. வித்துவான்.**

பட்டத்தய்யர் சந்து, பேரையூர்(வழி), இருமங்கலம், மதுரை மாவட்டம்.

பி: பேரையூர், *6-8-1922*. அ. பி. மொ: ஆங்கிலம், கன்னடம். நூல்: மாணவர் செந்தமிழ் இலக்கண வினு விடை *1960*.

**பாமணி.** பெ. ச. M.A.

தமிழ்த்துறை, மதுரைக் கல்லூரி, மதுரை-*11*.

பி: பரமக்குடி, இராமநாதபுர மாவட்டம், *15-7-1936*. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. நூல்: அழகு முல்லை *1958* (கவிதை), திருமண நினைவு மலர் *1963*.

**பாண்டியன். எல். எஸ்.**

*38*, பத்மநாப நாயுடு வீதி, அம்பத்தூர், சென்னை-*53*.

பு. பெ: பொன்மலையான், முத்துவேந்தன். பி: நாலுமாவடி, நெல்லை மாவட்டம், *9-4-1937*. நூல்: தமிழர்களே உங்கள் ஓட்டு யாருக்கு? *1962*. 'அழகி' மாத இதழ் ஆசிரியர்.

**பாண்டியன். கோபி.**

*6*, சிலேடர் ஹவுஸ் வீதி, கோபி செட்டி பாளையம், கோவை மாவட்டம்.

பி: கோபி செட்டி பாளையம், டிசம்பர், *1929*. அ. பி. மொ: உருது. பதினைந்து ஆண்டுகளாக நாடகங்கள் எழுதி வருகிறார்.

**பாண்டுரெங்கன். நா. M.A.**

1, அம்மையப்ப முதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை-14.

பி: கும்பகோணம், தஞ்சை மாவட்டம், 27-8-1927. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: இயற்கை சிரிக்கிறது 1956 (சிறுகதை). பல திரைப் படங்களுக்கு உரையாடல் எழுதி யவர். 'சித்தர் மகள்', 'சுமைதாங்கி' நாடகங்களின் ஆசிரியர். புதுக் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர்.

**பார்த்தசாரதி. நா.**

6, நல்லதம்பி செட்டி தெரு, சென்னை-2.

பு. பெ: மணிவண்ணன், பொன்முடி, வளவன், கூடலழகன், இளம்பூரணன். பி: நதிக்குடி, இராமநாதபுர மாவட்டம், 18-12-1932. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம், இந்தி. நூல்: கோபுர தீபம் 1959, குறிஞ்சி மலர் 1964 (இரண்டும் சமூக நாவல்), பாண்டிமாதேவி 1960 (சரித்திர நாவல்), வேனில் மலர்கள் 1961 (சிறுகதை), கவிதைக் கலை 1962 (கட்டுரை) முதலிய 25. வித்துவான், பண்டிதர் பட்டங்கள் பெற்றவர். 'தீபம்' மாத இதழின் ஆசிரியர்.

**பார்த்தசாரதி. ரா.**

10, முதல் வீதி, சேட் காலனி, சென்னை-8.

பு. பெ: பரதன். பி: எருக்காட்டூர், தஞ்சை மாவட்டம் 3-6-1906. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: ஹாஸ்யச் சுரங்கம் 1948. திருச்சி வானொலி நிலையம், சென்னை அர சாங்கச் செய்தித் துறை, காதி இலாகா ஆகியவற்றின் டைரக்டராகப் பணி புரிந்தவர்.

**பார்த்தசாரதி. வா. கோ.**

6-E, ராஜா காலனி, துறையூர், திருச்சி மாவட்டம்.

பு. பெ: பரதேசி. பி: வாவாஜிக் கோட்டை, தஞ்சை மாவட்டம், 3-12-1923. அ. பி. மொ: இந்தி. நூல்: புளியஞ்சோலையிலே 1960 (கவிதை). மொ. பெ: மின்னல் கொடியாள் (ரவீந்திரநாத் டாகூர்). இந்தியிலும் கவிதை நூல் எழுதியுள்ளார்.

**பார்வதி பாலசுப்பிரமணியன்.**

12, சந்திர சேகரன் தெரு, சென்னை-28.

பு. பெ: பாலப்ரியா. பி: பெங்களூர், 10-9-1937. அ. பி. மொ: தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஹிந்தி, ஆங்கிலம். நூல்: வாழ்வின் ஒளி 1964 (நாவல்), அசட்டுப் பெண் 1963 (சிறுவர் நூல்).—'கண்ணன்' நாவல் போட்டியில் 2-ம் பரிசு பெற்றது.

**பார்வதி ஸ்ரீநிவாஸன்.**

54, முண்டக்கண்ணி அம்மன் கோயில் தெரு, சென்னை-4.

பி: சைதாப்பேட்டை, சென்னை, 16-11-1914. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. நூல்: தாய்மையும் குழந்தை வளர்ப்பும்

1948 (மருத்துவம்). கௌரவ சமூக சேவகி, மாதர் நல சங்கங்கள் மூலம் பணியாற்றுபவர்.

**பாலகிருட்டினன். இர.** B.A., L.T.

நல்லாடை, தஞ்சை மாவட்டம்.

பு. பெ: இர. இளங்கண்ணன். பி: நல்லாடை, 26-6-1903. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: சிறுவர்க்கேற்ற சிறுகதைகள் 1947, இளங்கண்ணன் நினைவு மலர் 1951, சங்க காலப் பாவலரும் காவலரும் 1958. ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவை: The Golden Anthology of Ancient Literature. (Three Volumes) 1959—60. தென்மொழிப் புத்தக டிரஸ்டில் தமிழ் மொழி ஆசிரியராகப் பணியாற்றியவர். ஓய்வு பெற்ற மாவட்டக் கல்வி அலுவலர்.

**பாலகிருட்டினன். வே. அ.**

நிர்வாகி, என். ஆர். கிருஷ்ணசாமி முதலியார் உயர் தொடக்கப்பள்ளி, சென்னை-1.

பு. பெ: இளங்கண்ணன். பி: சென்னை, 12-9-1931. அ. பி. மொ: தெலுங்கு, கன்னடம், ஆங்கிலம், பிரஞ்சு. ஏழு ஆண்டுகளாக எழுதி வருகிறார். முன்னாள் ஒய்.எம்.சி.ஏ. பட்டி மன்றச் செயலாளர்.

**பாலகிருஷ்ணன். எஸ்.** M.B. B.S. F.R.C.P.

D-2/40, East Kidwai Nagar, New Delhi-3.

பு. பெ: புரசு பாலகிருஷ்ணன். பி: லாகூர் (பஞ்சாப்), 5-8-1914. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம். நூல்: பொன் வளையல் 1942, காதற் கடிதம் 1947 (இரண்டும் சிறுகதைகள்), தமிழும் ஆங்கிலமும் 1947 (கட்டுரைகள்), கிருஷ்ணகுமாரி 1964 (நாடகம்), ஆன்டன் செஹாவ் 1947 (வரலாறு விமர்சனம்). ஆங்கிலத்தில்: The Gold Bangle and other Stories. சில சிறுகதைகள் கன்னடத்திலும் வெளி வந்துள்ளன. 'பொன் வளையல்' கதை 1937-ல் ஆனந்த விகடனின் பாரதி பதக்கப் பரிசு பெற்றது.

**பாலகிருஷ்ணன். பி.**

49, டுப்ளக்ஸ் வீதி, காரைக்கால்.

பு. பெ: பூபாலன். பி: நாகப்பட்டினம், தஞ்சை மாவட்டம், 15-12-1939. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி, மலையாளம். ஆறு ஆண்டுகளாகக் கவிதை, சிறுகதைகள் எழுதி வருகிறார்.

**பாலகிருஷ்ணன். பி. இ.**

42/43, பிடாரியார் கோவில் தெரு, சென்னை-1.

பி: சென்னை, 18-4-1930. அ. பி. மொ: ஆங்கிலம், தெலுங்கு. நூல்: ஏமாந்த நாய்க்குட்டி 1960, சிறந்த பையன் 1961, பயந்த குரங்குக் குட்டி 1963 (மூன்றும் சிறுவர்க்கு), அவனும் திருந்தினான் 1964 (நாடகம்), பாரதி கண்ட தாய்க்குலம் 1965 (இலக்கிய ஆராய்ச்சி) முதலிய 17.

**பாலகிருஷ்ணன். ரா.**

*'ஆனந்தம்', 16-B, புஷ்பநகர் முதல் தெரு, நுங்கம்பாக்கம், சென்னை-34.*

*பு. பெ: பாணன். பி: மாயூரம், தஞ்சை மாவட்டம், 15-6-1922. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம். நூல்: வாழும் வகை 1964, ஏழை அழுத கண்ணீர் 1965 (இரண்டும் சிறுகதை), மருத்துவ மேதைகள் 1963 (வாழ்க்கை வரலாறு), கடவுளைக் கண்டேன் 1963 (நாடகம்), பொன்மீன் 1965 (சிறுவர் நூல்).*

**பாலகுருநாதன். சி. எஸ். M.A.**

*40, அப்பர்சாமி கோயில் தெரு, சென்னை-4.*

*பு. பெ: பாலகுரு. பி: சென்னை, 26-4-1930. அ. பி. மொ: தெலுங்கு, ஆங்கிலம். நூல்: குகை வழியே 1964 (சிறுவர் நாவல்). மொ. பெ: பாரதப் பெண்மணிகள் (விவேகானந்தர்), விஷமக் கோபுவின் விசித்திர யாத்திரை (தெலுங்கு மூலம்). வானொலியில் சிறுவர்களுக்கு நாடகங்கள், தொடர் கதைகள், கவிதைகள் எழுதி வருகிறார். விவேகானந்தா கல்லூரித் தமிழ் விரிவுரையாளர்.*

**பாலசுந்தரம். எஸ்.**

*பாலுபிரஸ், 285, நேத்தாஜிவீதி, ஈரோடு-1.*

*பி: ஈரோடு, 12-12-1912. அ. பி. மொ: ஆங்கிலம். முப்பது ஆண்டுகளாகக் கவிதை, புகைப்படங்களுடன் பிரயாணக் கட்டுரைகளும் எழுதி வருகிறார்.*

**பாலசுந்தரம். ச. வித்துவான்.**

*வடக்கு வீதி, தஞ்சாவூர்.*

*பு. பெ: ச. பா. பி: கரந்தை, தஞ்சாவூர், 18-1-1924. அ.பி.மொ: ஆங்கிலம். நூல்: மலைத்தேன் 1966 (சிறுவர் நூல்), புலவர் உள்ளம் 1965 (கவிதை நாடகம்), கரந்தைக் கோவை (சிற்றிலக்கியம்), ஆதிமந்தி 1950 (நாடகம்) கரந்தைப் புலவர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்.*

**பாலசுப்பிரமணியம். எஸ். ஆர். M.A., L.T.**

*'சந்திரபாகா' 23, ஸ்டெர்லிங் ரோடு, சென்னை-34.*

*பி: ஏப்ரல் 1893. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம். நூல்: கோப்பெருஞ்சிங்கன் 1965 (வரலாற்று ஆராய்ச்சி), முற்காலச் சோழர் கலையும், சிற்பமும் 1966, சோழர் கலைப் பாணி 1966. ஆங்கிலத்தில்:* Four Chola Temples *1963,* Early Chola Art Part I, *1966.*

**பாலசுப்பிரமணியம். கே. எம். M.A., B.L.**

*தெப்பக்குளம், திருச்சி.*

*பி: தாராபுரம், கோவை மாவட்டம், 9-2-1908. நூல்: மாணிக்கவாசகர் மாலை 1946, திருத் தொண்டர் கீதம் 1949, திருப்பழனி வெண்பா அந்தாதி 1957. ஆங்கிலத்தில்:* South Indian Celebrities (2 Volumes), Saiva Siddhantam,

Tiruvasagam, Thirukkural. தமிழ் எழுத்தாளர் சங்கப் பதக்கம் பெற்றவர் (1964). 'திருவாசக மணி', 'திருக்குறள் மணி' என்ற சிறப்புப் பட்டங்கள் பெற்றவர்.

**பாலசுப்பிரமணியம். 'சிற்பி'. M.A.**

தமிழ் விரிவுரையாளர், நல்லமுத்துக் கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி, பொள்ளாச்சி, கோவை மாவட்டம்.

பு. பெ: சிற்பி. பி: ஆத்துவப் பொள்ளாச்சி, கோவை மாவட்டம், 29-7-1936. அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம். நூல்: நிலவுப் பூ 1963 (கவிதை). பொள்ளாச்சி இலக்கியச் சங்கச் செயலாளர்.

**பாலசுப்பிரமணியம். பி.**

36, நாகப்ப ஐயர் தெரு, சென்னை-5.

பு. பெ: பாசுமணி. பி: சென்னை, 23-11-1932. அ.பி.மொ: ஆங்கிலம். நூல்: சூழ்ச்சிச் சுழல் 1951 (நாடகம்), பஞ்ச பாவையர் 1954 (நாவல்). பல திரைப்படங்களுக்குக் கதை வசனம் எழுதியுள்ளார்.

**பாலசுப்பிரமணியம். வல்லை. B. A.**

15, முத்து கிருஷ்ணன் தெரு, சென்னை-1.

பி: சென்னை, 15-7-1905. அ. பி. மொ: இந்தி, தெலுங்கு, ஆங்கிலம். நூல்: வேளாளர் தோற்றமும் வரலாறும் 1926. மொ. பெ: இந்திய அரசியலமைப்பு 1952. 'வேளாளர் தோற்றமும் வரலாறும்' என்ற நூல் கட்டுரைப் போட்டியில் தங்கப் பதக்கம் பரிசு பெற்றது. சென்னை அரசினர் தலைமைத் தமிழ் மொழிபெயர்ப்பாளர், நூற்பதிவாளராகவும், சென்னைப் பல்கலைக் கழக ஆங்கிலம்-தமிழ் அகராதித் துணையாசிரியராகவும் இருந்தவர். இப்போது சென்னை ஆட்சி மொழிக் குழு மொழிபெயர்ப்பாளர்.

**பாலசுப்பிரமணியன். சி. M.A., M.Litt.**

19, வேளாளர் தெரு, அமைந்தகரை, சென்னை-29.

பு. பெ: சிபா. பி: செஞ்சி, தெ. ஆ. மாவட்டம், 10-5-1935. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: தமிழ் இலக்கிய வரலாறு 1959; உருவும் திருவும் 1965, கட்டுரை வளம் 1966 (யாவும் கட்டுரைகள்). சென்னை பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர்.

**பாலசுப்பிரமணியன். தி. புலவர்.**

கிக்கானி உயர்நிலைப்பள்ளி, கோவை.

பு. பெ: இளமுருகு. பி: கோவை, 15-6-1934. நூல்: வாழ்க தம்பதிகள் (கட்டுரை), காந்தியண்ணல் பிள்ளைத் தமிழ் (கவிதை).

**பாலசுப்பிரமணியன். ப. நா. B.SC.**

35, கவரைத் தெரு, சைதாப்பேட்டை, சென்னை-15.

பு. பெ: பால்யன், கலாதரன். பி: சைதாப்பேட்டை, சென்னை, 20-6-1943. அ. பி. மொ: இந்தி, சமஸ்கிருதம்,

தெலுங்கு, ஆங்கிலம். நூல்: சிந்தனையாளர் ஐன்ஸ்டீன் 1966 (விஞ்ஞானம்).

**பாலசுப்பிரமணியன். பா.** B.SC., M.A., (Hist), M.A., M.Litt., (Tamil).
16, ஆண்டித் தெரு, இராயப்பேட்டை, சென்னை-14.
பு. பெ: பா. இளவழகன், மணியன். பி: தெரணி, சித்தூர் மாவட்டம், 1-7-1932. அ. பி. மொ: தெலுங்கு, ஆங்கிலம், இந்தி, ரஷ்யன். மொ. பெ: மாதிரி இலட்சாதிபதி 1966 (சிறுகதை). தில்லிப் பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர். தமிழ் எழுத்தாளர் சங்கப் பொதுச் செயலாளர் (1962-63). 'கலைக்கதிர்' துணையாசிரியராக ஓராண்டும், தென்மொழிப் புத்தக டிரஸ்ட் தமிழ் மொழி ஆசிரியராக மூன்றுண்டுகளும், 'அணுக்கதிர்' ஆசிரியர்—வெளியீட்டாளராக ஓராண்டும் பணியாற்றியவர்.

**பாலசுப்பிரமணியன். மு. பி.**
தமிழ் விரிவுரையாளர், பச்சையப்பன் கல்லூரி, காஞ்சிபுரம்.
பு. பெ: பாசுமணியன், மணிவேந்தன். பி: அய்யாபுரம், திருநெல்வேலி மாவட்டம், 16-5-1939. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: சிறுபாணுற்றுப்படை 1964(உரை நூல்), சீனத்துப் பரணி 1965 (கவிதை நூல்). 1960-ல் சென்னை மாணவர் மன்றம் நடத்திய கவிதைப் போட்டியில் முதற் பரிசு பெற்றவர். செங்கற்பட்டு மாவட்டத் தமிழாசிரியர் கழகத் தலைவர் 1966.

**பாலசுப்பிரமணியன். வி.**
2/3, கோவிந்தப்ப நாயகன் தெரு, சென்னை-1.
பு. பெ: ரமணீயன். பி: குடியேற்றம், வ. ஆ. மாவட்டம், 17-4-1939. அ. பி. மொ: ஆங்கிலம், தெலுங்கு, இந்தி, கன்னடம். நூல்: கடலின் குழந்தைகள் (குழந்தைகளுக்கான அறிவியல்), ஞானத் திருக் கோயில் (சரித்திரக் குறுநாவல்), இந்திரா காந்தி 1966 (வரலாறு). 'அகல்' பத்திரிகையை நடத்தியவர்.

**பாலசுப்ரமணியம். என்.**
2/25, குமாரசாமி முதலித் தெரு, பெரம்பூர், சென்னை-11.
பு. பெ: ஜடாதரன், பால்யூ. பி: நாகப்பட்டினம், தஞ்சை மாவட்டம், 19-10-1926. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம். 18 ஆண்டுகளாகச் சிறுகதை, நாவல், கட்டுரைகள் எழுதிவருகிறுர்.

**பாலசுப்ரமணியம். கு. மா.**
133/3, பீமசேனு கார்டன்ஸ், சென்னை-4.
பு. பெ: லக்ஷ்மீபதி, வாலி, குத்திட்டி. பி: வேளுக்குடி, தஞ்சாவூர் மாவட்டம், 14-5-1920. நூல்: இன்பத்துளிகள் 1947, சூடிய மலர் 1950 (இரண்டும் கதைத் தொகுதி) கருஞ்சட்டை ஒழிக, 1951 திராவிடஸ்தான் மண் குதிரை 1951 (இரண்டும் அரசியல் கட்டுரை), காதல் தந்த இன்பம்

1958 (நாடகம்). பல திரைப்படங்களுக்குக் கவிதை இயற்றியவர்.

**பாலசுப்ரமணியன். கி.**

29, ஜீனிஸ் தெரு, சைதாப்பேட்டை, சென்னை-15.

பு. பெ: இளையவன். பி: தஞ்சாவூர், 11-5-1945. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: ஸ்ரீமத் ராமாயணம் 1964 (கவிதை), புதுமை நெஞ்சம் 1966 (சிறுவர் நூல்). கண்ணன் தொடர் கதைப் போட்டியில் பரிசு பெற்றவர்.

**பாலசுப்ரமணியன். வி.**

சேவாஸ்ரமம், சேந்தமங்கலம் அஞ்சல், கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

பு. பெ: துடி, பாலு, தானப்பன், நாட்டுப் பரதேசி. பி: சேந்தமங்கலம். அ. பி. மொ: ஆங்கிலம். 1933 லிருந்து கட்டுரை, கதை, கவிதை எழுதி வருகிறார். ஹோமியோபதி டாக்டர்.

**பாலசுப்ரஹ்மணியன். டி. கே.**

சேலம், ஈரோடு மின்சார விநியோக கம்பெனி (S. E. E. D. Co.,), ஹஸ்தம்பட்டி, சேலம்-7.

பு. பெ: மகரிஷி. பி: ஒரத்த நாடு, தஞ்சாவூர் மாவட்டம், 1-5-1932. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: பனிமலை 1962, உயிர்த் துடிப்பு 1963, மேக நிழல் 1964, மகா நதி 1965, எதிர் காற்று 1966 (ஐந்தும் நாவல்) முதலிய 12. இவரது நாவல் 'என்னதான் முடிவு' திரைப்படமாக 1965 -ல் வெளிவந்துள்ளது. சினிமா ரசிகர் சங்கத்தால் சிறந்த திரைக் கதாசிரியராக கௌரவிக்கப் பெற்றவர்.

**பாலசெல்வ கணபதி. ஆர்.**

13, ஆஞ்சநேயர் கோவில் தெரு, பூவிருந்தவல்லி.

பு. பெ: கொளத்தூர் கணபதி. பி: மெய்ப் பேடு, செங்கை மாவட்டம், 1-6-1942. அ. பி. மொ: ஹிந்தி, தெலுங்கு, ஆங்கிலம். நூல்: வேங்கடம் 1963, அமுதகலசம் 1964 (இரண்டும் தொகுப்பு).

**பாலதண்டாயுதம். கே.**

2, மங்கேஷ் தெரு, சென்னை-17.

பி: பொள்ளாச்சி, கோவை மாவட்டம், 2-4-1918. அ. பி. மொ: ஆங்கிலம். மொ. பெ: தேனீக்கள். இருபத்தி மூன்றாண்டுகளாக அரசியல் கட்டுரைகள் எழுதி வருகிறார்.

**பாலு. கோவை. க.**

22/2. சி, எல்லைய சந்து, கோயமுத்தூர்-1.

பி: பன்னீர்மடை, கோவை மாவட்டம், 4-2-1947. நூல்: பறவை 1965.

பால்வண்ணன். தா.

16, இராஜ கோபால் நாய்க்கன் தெரு, சிந்தாதிரிப் பேட்டை, சென்னை-2.

பு. பெ: ஊடுருவி, கலைச்செல்வன், மான்விழி, பவளமணி, புஷ்பராணி. நூல்: திருவிளக்கு 1964 (நெடுங்கதை), இல்லற ஒழுக்கம் 1964, நீடுவாழ நல்ல வழிகள் 1963 (ஒழுக்க விளக்கம்), திருக்குறள் சிறப்புரை 1953 (விளக்க வுரை), இருமணம் (நாவல்) முதலிய 31. மொ. பெ: மலரும் கனியும், உண்மை, கடவுள், மதங்கள் சீர்திருத்தம், வால் டையர் முதலிய 20. 'கலைமன்றம்', 'முன்னேற்றம்', 'அறிவொளி' 'கலை அரங்கம்' ஆகிய பத்திரிகைகளின் ஆசிரியராயிருந்தவர். தற்போது 'சுத்த சன்மார்க்கம்' (மாத இதழ்) ஆசிரியர்.

பாஸ்கரன். ரா. B.A.,

13, சி. புதுக்குளத் தெரு, நுங்கம்பாக்கம், சென்னை-34.

பு. பெ. தாமரைமணாளன். பி: செட்டிகுளம், திருநெல்வேலி மாவட்டம், 19-6-1935. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: சிவில் சிங்கராயர் 1966 (சிறுகதை). 'ராணி' சிறுகதைப் போட்டியில் இருமுறை பரிசு பெற்றவர். வானொலி நாடகங்களும், நகைச்சுவைக் கதைகளும் எழுதிவருகிறார். சில மேடை நாடகங்கள் அரங்கேறியுள்ளன.

பாஷா. யு. கே.

259, கனகராஜன் பாதை, உடுமலைப்பேட்டை.

பு. பெ: யு. கே. மதி அன்பன். பி: உடுமலைப்பேட்டை, 12-6-1940. அ. பி. மொ: ஆங்கிலம், உருது. ஐந்து ஆண்டுகளாகக் கதை, கட்டுரை, கவிதை, நாடகம் எழுதி வருகிறார்.

பாஷ்யம். எஸ்.

13, மகாலட்சுமி தெரு, சென்னை-17.

பு. பெ: சாண்டில்யன். பி: திருக்கோயிலூர், தெ. ஆ. மாவட்டம், 6-1-1910. அ. பி. மொ: ஸம்ஸ்கிருதம். நூல்: உதயபானு, மலைவாசல், கன்னிமாடம், (சரித்திர நாவல்கள்), ஒன்பதாவது இரவு (சிறுகதை), செண்பகத் தோட்டம் (சமூக நாவல்) முதலிய 15. பல திரைப் படங் களுக்கு வசனம் எழுதியுள்ளார்.

பாஷ்யம். கே. வி.

18, பண்டல வேணு கோபால நாயுடு தெரு, சென்னை-5.

பு. பெ: அசுவத்தாமா. பி: ஸ்ரீபெரும்புதூர், செங்கற்பட்டு மாவட்டம், 21-11-1932. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம். நூல்: பலசரக்கு 1959 (தொகுப்பு), கிடு கிடுத்த காடு 1958 (சிறுவர்க்கு). மொ. பெ: படகுப் பாவை 1960, (உலகச் சிறுகதைகள்). 'கிடுகிடுத்த காடு' தெலுங்கில் வெளியாகியுள்ளது.

**பிச்சமூர்த்தி. குழித்தலே.**

அமுதப் பிரசுராலயம், 9. சத்திரம் தெரு, குளித்தலே. p.o.

பு. பெ: கிளர்ச்சிப் பித்தன், சந்திரா மணளன், அமுதன். பி: குளித்தலே, திருச்சி மாவட்டம், 2-5-1926. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: கதவு திறந்தது 1946, வ. உ. சி. யின் வீரகர்ஜனே 1947, அறிவுலகச் சிற்பி 1950, கோட்சேக் கூட்டம் 1950, அவள் விபசாரியா ? 1950, 'விஸ்வேஸ்வரி', 'தொழிலுலகம்' ஆசிரியராகவும், 'சிற்பி' இணை ஆசிரியராக வும் பணிபுரிந்தவர்.

**பிச்சமூர்த்தி. ந. B.A.**

85. வெங்கட்ரங்கம் பிள்ளேத் தெரு, சென்னே-5.

பு. பெ: பிக்ஷு, ரேவதி. பி: கும்பகோணம், தஞ்சை மாவட்டம், 15-8-1900. அ. பி. மொ: ஆங்கிலம், தெலுங்கு. நூல்: மோகினி, பிச்சமூர்த்தியின் கதைகள் (இரண்டும் சிறுகதை), காளி (நாடகம்), குடும்ப ரகசியம் (சிறு நாவல்), காட்டு வாத்து (புதுக் கவிதை) முதலிய 9. கோயில் நிர்வாகத் துறை அதிகாரியாகவும், பத்திரிகை உதவி ஆசிரியராகவும் பணியாற்றியவர்.

**பிரசாத் ஆர்.**

12, திருவீதியான் தெரு, கதீட்ரல் போஸ்ட், சென்னே-6.

பி: கோலார், 21-10-1937. அ. பி. மொ: ஆங்கிலம். லூத்தரன் சென்டர் வானெலி நிகழ்ச்சிகளுக்கு 400-க்கு மேற்பட்ட நாடகங்கள் எழுதியுள்ளார். அவற்றில் பல ஆங்கிலம், மலேயாளம், தெலுங்கு, ஹிந்தி, பர்மிய மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு ஒலிபரப்பப் பெற் றுள்ளன;

**பிரான்சிஸ்முராய்ஸ். மறைத்திரு. M.A. M.Litt.**

லொயோலாக் கல்லூரி, சென்னே-34.

பி: தூத்துக்குடி, 19-10-1909. அ. பி. மொ: ஆங்கிலம், லத்தீன். நூல்: உவகை உள்ளம் 1955(கவிதை),அமைதியின் அண்ணல் 1960 (வாழ்க்கை), தமிழ் மறுமலர்ச்சி 1961 (ஆராய்ச்சி), சதங்கை 1962 (கவிதை). ஆங்கிலத்தில் பல ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதியிருக்கிருர்.

**பிலோஇருதயநாத்.**

26, பெரியபள்ளி வீதி, மந்தவெளிப்பாக்கம், சென்னே-28.

பி: மைசூர், 26-10 1916. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: ஆதிவாசிகள் 1961. காடு கொடுத்த ஏடு 1965, நீலகிரி படகர்கள் 1965, கேரள ஆதிவாசிகள் 1966, (நான்கும் மானிட இயல்), ஏழைகளின் குடும்பக்கலே 1965 (தொழில்)

முதலிய 12. மானிட இயலை நேரடியாகக் காடுகளில் கண்டு 30 ஆண்டுகளாக ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதி வருகிறார்.

**பிள்ளை. கே. கே.** B.A. (Hons.), D Litt., D. Phil.
சரித்திரப் பேராசிரியர், சென்னை பல்கலைக் கழகம், சென்னை-5.
பி: ஆளூர், கன்னியாகுமரி மாவட்டம், 3-4-1905. அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம். நூல்: தென் இந்திய வரலாறு (இருபகுதிகள்), இங்கிலாந்து வரலாறு. ஆங்கிலத்தில்: History of Local Self Government of the Madras Presidency, The Suchindram Temple, A History of Nanchinad.

**புகழேந்தி. ப.**
1/4, இரண்டாவது தெரு, தெற்கு கோபாலபுரம், சென்னை-6.
பி: கடைய நல்லூர், திருநெல்வேலி மாவட்டம், 10-12-1934. அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம். நூல்: மறுமலர்ச்சித் தூதுவர்கள் 1953 (வரலாறும் விமர்சனமும்), எச்சில் கனி 1954 (சிறுகதை). இவரது பல சிறுகதைகள் மலையாளத்தில் வெளிவந்துள்ளன. 'தென்றல்', 'முல்லை' இதழ்களின் துணையாசிரியராக இருந்தவர். தற்போது 'கதிர்' (இலக்கிய மாத இதழ்) ஆசிரியர். திரைப்பட எழுத்தாளர்; உதவி டைரக்டர்.

**புருஷோத்தம நாயுடு. பு. ரா. வித்துவான்.**
32, இராஜகோபால நாயக்கன் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.
பி: புவனகிரி, 15-11-1901. நூல்: திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம் (பத்துப் பாகங்கள்). 'திருவாய் மொழி' சென்னை அரசினர் பரிசு பெற்றது.

**புவனேசுவரன். ப. இராசை.**
'புவன நிலையம்' 5, பெரிய அக்ரஹாரம், இராசிபுரம், சேலம் மாவட்டம்.
பு. பெ: வசந்தப்பித்தன், ஜாபலி, செம்மீன். பி: இராசிபுரம், 15-7-1944. அ. பி. மொ: ஆங்கிலம், ஹிந்தி. 1962 முதல் சிறுகதை, கவிதை எழுதிவருகிறார்.

**புவியரசு. களந்தை. ந.**
தலைமை ஆசிரியர், ப. யூ. பள்ளி, வெண்டாகோட்டை, பட்டுக் கோட்டை வட்டம், தஞ்சை மாவட்டம்.
பி: களக்காடு, திருநெல்வேலி மாவட்டம், 14-3-1941.

அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: முல்லை 1966 (சிறுவர் கவிதை).

**புனிதவதி இளங்கோவன்.** B.A., B.T.

1/44, அருண்டேல் தெரு, சென்னை-4.

பி: சென்னை, 9-12-1938. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: பாரதத்திலகம் மோதிலால் நேரு 1966 (வரலாறு), நங்கையர் நல்லறம் 1966 (அறிவியல்).

**புன்னைவனநாத முதலியார். பு. சி. வித்துவான்.**

86, 'புலவரகம்', அம்மன் சந்நிதித் தெரு, திருநெல்வேலி-6.

பி: ஸ்ரீவில்லிபுத்தூர், 25-4-1889. அ. பி. மொ: ஆங்கிலம், உருது, வடமொழி, மலையாளம். நூல்: மஹாராணி மங்கம்மாள் 1922, தென்னிந்திய மன்னர் வரலாறு 1920, சாயிபாபா புராணம் 1940, ஆண்பால் பிள்ளைத் தமிழ்க் கொத்து (6புத்தகம்) 1956, திருவிளையாடற் புராணக் கதைகள் முதலிய 38. மொ. பெ: அற்புதக் கணையாழி, யக்ஞவல்க்யம்.

**பூமிநாதன். எஸ்.** B.A., B.T.

19, வடக்குத் தையற்காரத் தெரு, திருச்சி-8.

பி: ராமச்சந்திரபுரம், திருச்சி மாவட்டம், 5-2-1926. அ. பி. மொ: ஆங்கிலம். எழுநூறுக்கும் மேற்பட்ட இவரது நாடகங்கள் திருச்சி வானொலியில் ஒலிபரப்பப்பட்டுள்ளன.

**பூர்ணம் ராமச்சந்திரன்.**

9-B, ஜேத்நகர் (சோமு முதலி காலனி), சென்னை-28.

பு. பெ: உமாசந்திரன். பி: முன்னீர்ப் பள்ளம், திருநெல்வேலி மாவட்டம், 15-10-1915. அ. பி. மொ: ஆங்கிலம், சமஸ்கிருதம், இந்தி, தெலுங்கு. நூல்: உதிர்ந்த மலர் 1955, அன்புச்சுழல் 1960, பொழுது புலர்ந்தது 1965 (மூன்றும் நாவல்), திரும்ப வழியில்லை 1955 (குறுநாவல்), விண்ணுசை 1965 (சிறு கதை). 1966-ல் கல்கி வெள்ளி விழா நாவல் போட்டியில் இவரது 'முள்ளும் மலரும்' பத்தாயிர ரூபாய் முதல் பரிசு பெற்றது. ஆங்கிலத்திலும், இந்தியிலும் இவரது சிறுகதைகள் வெளியாகியுள்ளன.

**பூர்ணம் விசுவநாதன்**

உதவி தகவல் அதிகாரி, பத்திரிகைத் தகவல் அலுவலகம், 122, மவுண்ட்ரோடு, சென்னை-6.

பு. பெ: உமாபுத்திரன். பி: தென்காசி, திருநெல்வேலி மாவட்டம், 15-11-1920. அ. பி. மொ: ஆங்கிலம், ஸம்ஸ்கிருதம், ஹிந்தி. நூல்: ராஜாவின் ரோஜா 1964 (சிறுகதை), சோம்பலே சுகம் 1964, தலை தீபாவளி 1964,

கௌரவ மாப்பிள்ளை 1966 (மூன்றும் சிறு நாடகங்கள்), அன்டர் செக்ரடரி 1965(முழுநாடகம்).ஸ்ரீ ரமேஷ் மேஹ்தா என்ற ஹிந்தி நாடக ஆசிரியரின் 'அண்டர் செக்ரடரி' நாடகத்தைத் தமிழில் தழுவி எழுதி சுமார் 100 தடவைகள் மேடையேற்றியவர். வானொலிக்காக 400 நாடகங்களும், சில தொடர் நாடகங்களும் எழுதியிருக்கிறார்.

**பெசன்ட்** கிரிப்பர் ராஜ். அ.M.A.(Philosophy) M.A (Psychology) M.D.,B.A.
பூ. சா. கோ. பொறியியல் கல்லூரி, பூளைமேடு, கோயமுத்தூர்-1.

பு. பெ: அ. கி. ரா. பெசன்ட். பி:நெய்யூர், கன்னியாகுமரி மாவட்டம், 6-2-1933. அ.பி.மொ: ஆங்கிலம். நூல்: சமூகத்தில் நாம் 1961, பித்தரின் உள்ளம் 1965, பிறழ் நிலை உளவியல் 1965 (யாவும் அறிவியல்). ஆங்கிலத்திலும் பல கட்டுரைகள் எழுதி வெளியிட்டிருக்கிறார்.

**பெரியசாமி. ப.**

34-B. முனியப்பன் கோவில் வீதி, கோட்டை, ஈரோடு.

பு. பெ: கதிரவன். பி: ஈரோடு, 12-4-1940. அ. பி. மொ: ஆங்கிலம். 1959-லிருந்து எழுதி வருகிறார். டாக்டர் மகள், மனிதனானேன், அவள் வாழ்வு முதலிய நாடகங்கள் எழுதி அரங்கேற்றியுள்ளார். இந்நாடகங்களுக்குப் பாடல்களும் இயற்றியுள்ளார்.

**பெரியசாமித் தூரன். ம. ப.** B.A. L.T.

43, இரண்டாவது மெயின் ரோடு, கஸ்தூர்பா நகர், சென்னை-20.

பு. பெ: பெ.தூரன். பி: மஞ்சக் காட்டுவலசு, கோயம்புத்தூர் மாவட்டம், 26-9-1908. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: இளந்தமிழா 1949, தூரன் கவிதைகள் 1962 (இரண்டும் கவிதைகள்), தங்கச் சங்கிலி 1962 (சிறுகதை), காதலும் கடமையும் 1957 (நாடகம்), நல்ல நல்ல பாட்டு 1965 (சிறுவர் இலக்கியம்.) முதலிய 40. மொ. பெ: கடல் கடந்த நட்பு, (Judy and Lakshmi)கானகத்தின் குரல் (The Call of-The wild). தமிழ்க் கலைக் களஞ்சியத்தின் பிரதம ஆசிரியர். இவரது "பாரதி தமிழ்" என்ற நூலைப் பாராட்டி தமிழ் எழுத்தாளர் சங்கம் தங்கப் பதக்கமும், குழந்தை எழுத்தாளர் சங்கமும், பாரதி சங்கமும் கேடயங்கள் வழங்கியுள்ளன. 'கருவில் வளரும் குழந்தை' மத்திய அரசாங்கப் பரிசும் 'தமிழிசைப் பாடல்கள்' அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பரிசும் பெற்றுள்ளன. "கலைக் களஞ்சியம்" பிரதம ஆசிரியர். இவரது தமிழிசைப் பாடல்கள் இசையரங்குகளிலும், வானொலியிலும் பாடப்பட்டு வருகின்றன.

**பெரியதம்பி மு.**

தமிழ் மனை, நச்சாந்துபட்டி, திருச்சி மாவட்டம்.

பு. பெ: சேரளன். பி: புதுக்கோட்டை, 5-6-1914. நூல்:

தாய் 1938, இளந்தளிர் 1934, மெய்யுறுதி 1939, மணிச் சரம் 1942, மணி வாக்கியம் 1930.

**பெருமாள். எம். எஸ். B.A.**

*33, தாச்சி அருணுசல முதலித்தெரு, சென்னை-4:*

புு. பெ: விஜய். பி: திருநெல்வேலி, 11-7-1945. அ. பி. மொ. ஆங்கிலம், ஹிந்தி. நூல்: யாரைக்கேட்டு வந்தாய்? 1964 (நாவல்). அகில இந்திய வானெலியினர் பல்கலைக் கழக மாணவர்க்கென நடத்திய நாடகப் போட்டியிலும், பாரதீய வித்யா பவனம் நடத்திய கல்லூரி மேடை நாடகப் போட்டியிலும் 'மானம் பொதுச் சொத்து' முதற் பரிசு பெற்றது. 'கல்கி' வெள்ளிவிழாச் சிறு கதைப் போட்டியில் 3-வது பரிசும், 'ராணி' சிறுகதைப் போட்டியில் இரண்டாவது பரிசும் பெற்றவர்.

**பெருமாள். க. M.A.**

*23, சுந்தர மூர்த்தி விநாயகர் கோயில் தெரு, சென்னை-5.*

பி: வெள்ளையகவுண்டனூர், வ. ஆ. மாவட்டம், 5-2-1922. அ. பி. மொ: ஆங்கிலம், தெலுங்கு. நூல்: இன்ப வெள்ளம் 1965, வான் சிறப்பு 1960 (இரண்டும் கவிதை). ஆங்கிலத்தில் இவரது கவிதைகள் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளன. சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்ப் பேராசியர்.

**பெருமாள். சி. ஈ. எஸ்.**

*74, புதுப்பாளையம் தெரு, பிள்ளையார் பாளையம், காஞ்சிபுரம்.*

பு. பெ: காஞ்சிநாயகன், ஜெயந்தீயன், கருப்புக் கண்ணுடியார், அடியார்க்கு அடியார், சீயியெஸ், காஞ்சி பெருமாள். பி: காஞ்சிபுரம், 15-6-1935. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. நூல்: திருக்கச்சித் தல வரலாறு 1965 (சமயவரலாறு). செங்கற்பட்டு மாவட்டப் பத்திரிகை நிருபர்கள், எழுத்தாளர் சங்கம் இணைச் செயலாளர்.

**பெருமாள். தே. ப.**

*40 F. கெங்கு ரெட்டி ரோடு, சென்னை-8.*

பு. பெ: கல்விக்குயில், பி. கோட்டாறு, கன்னியாகுமரி மாவட்டம், 1916. அ.பி. மொ: ஆங்கிலம், இந்தி, மலையாளம். நூல்: தமிழ்ச்சுனை 1944 (கவிதை), சிற்பியின் கனவு 1960, தளவாய் வேலுத்தம்பி 1962 (நவீனம்), முத்துக் கதைகள் 1961 (கதைகள்), சாந்தி (ஓரங்க நாடகங்கள்) முதலிய 13 நூல்கள். இந்தியிலிருந்து 'ஷாஜஹான்' துவிஜேந்திரலால்ராயின் நாடகம், 'பஞ்சவடி' (மைதிலி சரண்குப்தாவின் சிறு காவியம்) இரண்டையும் கவிதையாகத் தமிழிலே தந்துள்ளார்.

**பெருமாள். பொன்.**

*13, புதுத்தெரு, பூவிருந்தவல்லி, சென்னை-56:*

பு. பெ: பூவையான், மாலவன், சோழியன், குறளடியான் பி: குண்டு பெரும்பேடு, செங்கற்பட்டு, 6-7-1930.

அ. பி. மொ: ஆங்கிலம். பதினன்கு ஆண்டுகளாகச் சிறு கதை, கட்டுரை, சிறுவர்க்கும் எழுதிவருகிறார்.

**பெருமாள். மா.**

'மகிழ்ச்சி மனே,' மடத்துப்பட்டித் தெரு, ஸ்ரீவில்லிபுத்தூர், இராமநாதபுர மாவட்டம்.

பு. பெ: கோமதி மைந்தன். பி: ஸ்ரீவில்லிபுத்தூர், 1936. நூல்: எண்ண அலேகள் 1959 (சிறு கதைத் தொகுப்பு).

**பெருமாள். வ. M.A., B.T. M.R.A.S**

முதல்நிலேக் கல்லூரி, உரிகம், கோலார் தங்க வயல், (K.G.F) மைசூர் மாநிலம்.

பி: கொரடாச்சேரி, தஞ்சாவூர் மாவட்டம், 30-9-1934. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. கட்டுரை, பேச்சுப் போட்டி களில் பல பரிசு பெற்றுள்ளவர். 'குடும்பக் கட்டுப்பாடு', லஞ்சத்தை ஒழிப்பது எப்படி? என்னும் இரண்டு கட்டுரை கள் எழுதி அனேத்திந்திய ஆங்கிலக் கட்டுரைப் போட்டி களில் பரிசு பெற்றவர். தமிழிலுள்ள கல்வியைப் பற்றிய 1000 பாடல்களே ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளவர்.

**பெருமாள்சாமி. ஜே. கே.**

C/o திருவேணி டெக்ஸ்டைல்ஸ், பவானி.

பு. பெ: ஜெயவீரசிம்ம நாவலர். பி: ஜம்பை, கோவை மாவட்டம், 2-6-1909. அ. பி. மொ: கன்னடம், தெலுங்கு, மலேயாளம், இந்தி, சமஸ்கிருதம், ஆங்கிலம். நூல்: ஸ்ரீகாளியம்மன் பைந்தமிழ்ப் பாசுரம் 1931.

**பெருமாள் முதலியார். மு. ரா. M.A. L.T.**

பொதுக் கல்வி இயக்குநர், புதுச்சேரி.

பி: கோவை, 9-8-1910. அ. பி. மொ: ஆங்கிலம். மொ. பெ: இந்திய வரலாற்றுச் சுருக்கம் (A History of India by Moreland and Chatterjee) நமது இந்தியா (Our India by-Masani).

**பெருமாள் ஜெயராஜ். B.**

'காங்கிரஸ் ஊழியன்' துணே ஆசிரியர். திருச்செங்கோடு, சேலம் மாவட்டம்.

பு. பெ: ஊழியன், தேசியவாதி, ஞானமோகன். பி: அத்திக் கோம்பை, 6-4-1932. அ. பி. மொ: கன்னடம், மலேயாளம். 1955 முதல் சிறுகதை, இலக்கிய அரசியல் கட்டுரைகள் எழுதிவருகிறார்.

**பொன்னடியான்**

*100*, வேளாளத் தெரு, சென்னை-7.

பி: திருச்சி, *12-6-1940*. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: பனிமலர் *1965*. 'முல்லைச் சரம்' கவிதை மாத இதழின் ஆசிரியர். தமிழ்க் கவிஞர் பெருமன்றச் செயலாளர்.

**பொன்னம்பலம். ச.**

கம்பராசபுரம், திருவலம் அஞ்சல், வ. ஆ. மாவட்டம்.

பு. பெ: ச. பொன்னரசன். பி: கம்பராசபுரம் (திருவலம்), வ. ஆ. மாவட்டம், *15-11-1937*. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: அண்ணனின் புன்னகை *1964*.

**பொன்னுசாமி. கே. B.A.**

*11*, Rasta Path, Poona-2. (Maharashtra State)

பு. பெ: மயிலன். பி: கும்பகோணம், தஞ்சை மாவட்டம், *28-12-1919*. அ. பி. மொ: ஆங்கிலம், மராத்தி, இந்தி. நூல்: பாட்டுக் கொரு புலவன் *1952* (கட்டுரை), ராஜேஸ் வரி *1965* (நாவல்), செல்லம்மா *1965*, மலர்க் கூடை *1965* (இரண்டும் சிறுவர் நூல்).

**பொன்னுசாமி. டி. கே. எஸ்.**

*39*, நெல்லுக்கடை வீதி, உடுமலைப் பேட்டை, கோவை மாவட்டம்.

பு. பெ: கே. எஸ். பி, ஈஸ்வரன், உடுமலையான். பி: உடு மலைப் பேட்டை *27-10-1937*. அ. பி. மொ: ஆங்கிலம். பத்தாண்டுகளாகச் சிறுகதை, நாடகங்கள் எழுதி வருகிறார்.



# ம

**மகராஜன். எஸ். B.SC., B.L.**

தலைமை நீதிபதி, புதுவை.

பி: திருச்சிராப்பள்ளி, 2-5-1913. சொந்த ஊர் (திருநெல்வேலி). அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம், ஹிந்தி, ப்ரெஞ்ச். நூல்: ஒலிச் செல்வம் 1962(கட்டுரை), மொ.பெ: ஹாம்லெட், லீயர் அரசன். (ஷேக்ஸ்பியர் நாடகங்கள்). 1938-ம் ஆண்டு முதல் தமிழிலும், ஆங்கிலத்திலும் இலக்கியக் கட்டுரைகள் எழுதி வருகிறார். சாகித்ய அகாதமித் தமிழ் ஆலோசனைக் குழு அங்கத்தினர்.

**மகாதேவன். கே. எஸ்.**

C/o. ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி, சென்னை-5.

பி: கொண்டல் வட்டம் திடல், 1-7-1925. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: தெள்ளாறெறிந்த நந்திவர்மன் 1957 (நாடகம்), மின்னலும் இடியும், மந்திரம் இல்லை, கேள்வி—பதில், ஆணியும் நிமிஷமும் (முதியோருக்கு). சென்னை அரசினர் குழந்தை இலக்கிய ஆராய்ச்சித் துறை அலுவலர்.

**மகாலிங்கம். கி.**

ஆசிரியர், 'சத்திய கங்கை', ஷெனாய் நகர், சென்னை-30.

பு. பெ: பகீரதன். பி: 1922. நூல்: தேன் மொழியாள், முல்லைவனத்து மோகினி, கைதி சொன்ன கதை, வட இந்திய யாத்திரை, அழகப்பரின் அரிய சாதனைகள். 'கல்கி' உதவியாசிரியராகவும், 'கங்கை' ஆசிரியராகவும் பணியாற்றியவர்.

**மகாலிங்கம். சாலை. இராம. M.A., M. Litt.**

3362/1 Christian Colony, Delhi-5.

பு. பெ: சாலை இளந்திரையன், காஞ்சித்தலைவன், சாலை. பி: சாலைநயினார் பள்ளிவாசல், நெல்லை மாவட்டம், 6-9-1930. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: இளந்திரையன் கவிதைகள் 1962, அன்னை நீ ஆடவேண்டும் 1964 (கவிதை), புரட்சிக்கவிஞர் கவிதை வளம் 1965, தமிழில் சிறுகதை 1966, புதிய தமிழ்க் கவிதை 1966 (விமர்சனம்). தமிழர் திருநாள் சொற்பொழிவுகளுக்காக சிங்கை-மலாயா நாடுகளுக்கும், திருக்குறள் மாநாட்டுச் சொற்பொழிவுகளுக்

காக இலங்கைக்கும் சென்றவர். தில்லிப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப்பேராசிரியர்.

மணவாளன். கே. ஏ.

78A, வட குளக்கரைத் தெரு, சென்னை-5.

பி: போந்தவாக்கம், செங்கை மாவட்டம், 19-8-1926. அ. பி. மொ: சம்ஸ்கிருதம், ஆங்கிலம். நூல்: அருந்தமிழ் வளர்த்த அடிகளார் 1966.

மணி. என். கே. எஸ்.

124, 'மங்கள நிலையம்', திருமழிசை, உடையவர் கோயில் p.o, சென்னை-56.

பு. பெ: குரு. பி: நெம்மாறை, கேரளம், 5-10-1920. அ. பி. மொ: மலையாளம். நூல்: நித்தியானந்த சுகம் 1942 (கட்டுரை), The Essence of The Vedas (ஆங்கிலம்-தமிழ்) 1960.

மணி. எஸ். ஜே.

C/o. மணிகுஞ், தாராவி கிராஸ் ரோடு, பம்பாய்-17.

பு. பெ: ஆழ்வைமுகிலன். பி: தட்டார்மடம், திருநெல்வேலி, 15-3-1942. அ.பி. மொ: ஆங்கிலம், இந்தி, மராத்தி, குஜராத்தி. எட்டு ஆண்டுகளாக நாடகம், கவிதை எழுதிவருகிறார்.

மணி. டி. எஸ்.

7, பாளையம் பஜார், உறையூர், திருச்சி-3.

பு. பெ: அருணன். பி: திருச்சி, 3-3-1933. அ. பி. மொ: இந்தி, ஆங்கிலம். ஆறு ஆண்டுகளாகச் சிறுகதை, சிறுவர் இலக்கியம் எழுதிவருகிறார்.

மணி. பி. எஸ்.

ஆசிரியர், 'கன்னியாகுமரி', தமிழ் வார இதழ், ராமவர்ம புரம், நாகர்கோவில்.

பு. பெ: ஓசை, டாண். பி: நாகர் கோவில், கன்னியாகுமரி மாவட்டம், 7-2-1916. அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம். நூல்: இணைப்பா? 1953, திரு-தமிழரியக்கம் 1956, திரு. தமிழரியக்கத்தில் ம. பொ. சி 1956. நாகர் கோயிலில் நடந்த தமிழ் எழுத்தாளர் மாநாட்டின் வரவேற்புக் குழுச் செயலாளர். கன்னியாகுமரி மாவட்டத் தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர்; கன்னியாகுமரி மாவட்டப் பத்திரிகையாளர் சங்கத் துணைத் தலைவர்.

மணி. வி. ஆர். M.A.

61, புருஷோத்தம நகர், குரோம்பேட்டை, சென்னை-44.

பு. பெ: ரேவதி, ஜாபாலி. பி: கும்பகோணம், தஞ்சை மாவட்டம். அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம், இந்தி. ஆறு ஆண்டுகளாகக் கட்டுரைகள் எழுதி வருகிறார்.

**மணி. வி. எஸ்.**

10, சுப்பிரமணிய கார்டன் தெரு, சென்னை-5.

பு. பெ: குமரவேல். பி: மாயவரம், 15-6-1938. தொகுப்பு நூல்: தேச பக்தர் நினைவு மலர் 1965, செந்தமிழ்ச் செம்மல் சிவஞானம் 1966. பாரதி இளைஞர் மன்றச் செயலாளர். சுப்பிரமணிய சிவா செந்தமிழ் மன்றச் செயலாளர். 'வீட்டுக்கு வீடு பாரதி' இயக்கத்தின் அமைப்பாளர்.

**மணி. ஜி. எஸ்.**

ஆதிகுடி கிராமம், லால்குடி தாலுகா, திருச்சி மாவட்டம். பி: விசாகப்பட்டினம், ஆந்திரப் பிரதேசம், 17-11-1919. அ. பி. மொ: இந்தி, ஆங்கிலம். நூல்: புது உலகம் 1948, போராட்டம் 1951, நிழலாட்டம் 1960, கொடி மின்னல் 1963 (நான்கும் நாவல்), ஞானி 1963 (சிறுகதைத் தொகுப்பு).

**மணிசேகரன். கோவி.**

36. சாமிநாயக்கன் தெரு, சிந்தாதிரிப் பேட்டை, சென்னை-2.

பி: சென்னை, சித்திரை, பிரபவ. அ. பி. மொ: ஆங்கிலம், ஓரளவு தெலுங்கு. நூல்: செம்பியன் செல்வி 1959, பொன் வேய்ந்த பெருமாள் 1962, செஞ்சி அபரஞ்சி 1965, அசோக சக்கரம் 1966 (நான்கும் சரித்திர நூல்கள்), தென்னங்கீற்று 1964 (சமூக நூல்) முதலிய 56. மொ. பெ: ஜூலியஸ் ஸீஸர், ஹாம்லெட் (ஷேக்ஸ்பியரின் நாடகம்). வடதிசை, ஆந்திரம், இலங்கை முதலியவற்றின் வரலாற்றைப் பின்னணியாகக் கொண்ட சரித்திர நாவல்கள் எழுதியிருக்கிறார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இசைபயின்று 'சங்கீத பூஷணம்' பட்டம் பெற்றவர்.

**மணிமாறன்.**

G-60, வேல்முருகபுரம், Dr. T.C.M. இராயன் வீதி, பெங்களூர்-2.

பு. பெ: மணிமேகலை, மணிப்புரு, ராஜேஸ், ராஜேஸ்வரி, பெங்களூரான். பி: பெங்களூர் 1-8-1944. அ. பி. மொ: கன்னடம், ஆங்கிலம். 1956 லிருந்து சிறுகதை, கவிதை, நாடகம், கட்டுரை எழுதிவருகிறார். கருநாடக மாநிலத் தமிழ் எழுத்தாளர் மன்ற அமைப்பாளர்; தற்போது அதன் துணைத் தலைவர்.

**மணிவண்ணன். கு.**

அறை எண் 8. 9, தீனதயாளுத் தெரு, சென்னை-17.

பு. பெ: ஜெயவண்ணன். பி: அரசூர், தெ. ஆ. மாவட்டம், 15-4-43. அ. பி. மொ: ஆங்கிலம். ஆறு ஆண்டுகளாகச் சிறுகதைகள் எழுதிவருகிறார்.

**மணிவண்ணன். நாரண.**

வரகூர், அண்ணாமலை நகர் (p.o), சிதம்பரம்.

பு. பெ: பொன்னெயிற்கோன். பி: வரகூர், தெ. ஆ.

மாவட்டம், 1-6-1942. அ. பி. மொ: ஆங்கிலம், உருது. 1958 முதல் அறிவியல், சிறுவர் இலக்கியம் எழுதி வருகிறார்.

மதியழகன். இராசி.

1, A, வாசுதேவபுரம், மேற்கு மாம்பலம், சென்னை-33.

பி: கீழ ஈரால், திருநெல்வேலி மாவட்டம், 1943. 1955 முதல் சிறுகதை, நாடகம் எழுதிவருகிறார்.

மருதசாலம். வே.

2/313, பழையூர், பாப்பநாயக்கன் பாளையம், கோவை-1.

பு. பெ: வேமா. பி: கோவை, 1935. அ. பி. மொ: ஆங்கிலம். 1960 முதல் கவிதை எழுதி வருகிறார்.

மல்லிநாத் ஜெயின் சாஸ்திரி

115, தையப்ப முதலி தெரு, சென்னை-1.

பி: குளத்தூர், வ. ஆ. மாவட்டம், 15-10-1918. அ. பி. மொ: சம்ஸ்கிருதம், ஹிந்தி, பிராக்ருதம், கன்னடம், ஆங்கிலம். பத்து ஆண்டுகளாகக் கட்டுரைகள் எழுதிவருகிறார்.

மனோகரன். பு.

247, கீழ மாசி வீதி, மதுரை-1.

பு. பெ: மனோன். பி: விருதுநகர், மதுரை மாவட்டம், 10-4-1927. அ. பி. மொ: ஆங்கிலம். 15 ஆண்டுகளாகச் சிறுகதை, நாடகம், கட்டுரை எழுதிவருகிறார். 'தமிழ் மாலை', 'தமிழ்ப்பாவை' இதழ்களின் ஆசிரியராக இருந்தவர்.

மாணிக்கம். கே. எம். எஸ். பி. B.A., B.T., M. Ed.

புதுவயல், இராமநாதபுரம் மாவட்டம்.

பு. பெ: சரியாளன். பி: புதுவயல், 3-8-1924. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: நாடகம் 1950 (கட்டுரை). 1938 முதல் நாடகம், கட்டுரை, ஆராய்ச்சி எழுதிவருகிறார்.

மாணிக்கம். பி. ஜி.

பெருந்தலையூர் போஸ்ட், கவுந்தப்பாடி-வழி, ஈரோடு (R.M.S.).

பி: பெருந்தலையூர், கோயமுத்தூர், 17-9-1907. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: இந்திய-சீன-எல்லைத்தகராறு 1963. மதுபானமும்-புகைபிடித்தலும் 1966.

மாணிக்கம். மு.

94. தில்லை மேத்திரி வீதி, புதுச்சேரி.

பு. பெ: புதுவைக்கிழார். பி: தெய்வநாயகப் பிள்ளைத் தோட்டம், புதுச்சேரி, 5-4-1898. அ. பி. மொ:

பிரெஞ்சு. நூல்: பாவேந்தர் பாரதிதாசன் 1964 (கவிதை நூல்).

**மாணிக்கம். வ. சுப. M.A., M.O.L., Ph. D., வித்துவான்.**
முதல்வர், அழகப்பா கல்லூரி, காரைக்குடி-3.
பி: மேலைச்சிவபுரி, திருச்சி மாவட்டம், 17-4-1917. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: மனைவியின் உரிமை (நாடகம்), வள்ளுவம் (கட்டுரை), கொடை விளக்கு (கவிதை), தொல்காப்பியப் புதுமை (ஆராய்ச்சி), இரட்டைக் காப்பியங்கள் (பதிப்பு). 'வள்ளுவம்' சென்னை அரசினர் பரிசு பெற்றது.

**மாணிக்கம். வெ. தெ. M.A.**
50, தருமநாராயணன் செட்டியார் வீதி, காரைக்குடி-1.
பி: வேந்தன்பட்டி, திருச்சி மாவட்டம், 14-10-1933. அ. பி. மொ: ஆங்கிலம். 10 ஆண்டுகளாகக் கதை, கவிதை, கட்டுரை எழுதி வருகிறார். கோலாலம்பூரில் 1966-ல் நடந்த உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டில்—Harlots in Ancient Tamil Literature என்னும் இவரது ஆய்வுரை படிக்கப் பெற்றது.

**மாணிக்கவாசகம். தி. B.A.**
'மீனாட்சி நிலையம்', திருப்பரங்குன்றம் சாலை, மதுரை-3.
பு. பெ: மாசி. பி: ஆத்திக்காடு தெற்கூர், இராமநாதபுர மாவட்டம், 17-6-1920. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: பஞ்சாலைத் தொழில் (பாகம் 1, 2, 3) (1957, 1958 யும் 1962) (தொழில்), வான்புகழ் வள்ளுவர் பாகம் 1 முதல் 5 வரை (இலக்கியம் 1960, 1961, 1962, 1965, 1966), செந்தமிழ்ப்பாவை 1959, நாரணன் விளையாட்டு 1959, (இரண்டும் இலக்கியம்), அருந்தமிழ் வளர்த்த அமைச்சர் 1964 (நாடகம்) முதலிய 14 நூல்கள். 'சப்பான் நாடு' என்னும் பயண நூல் ஆறு பல்கலைக் கழகங்களில் துணைப் பாடமாக வைக்கப்பெற்றது. 'தமிழ் நாடு' (நாளிதழ்) ஆசிரியர்.

**மாணிக்கவாசகம். ப.**
கிருஷ்ணசாமி பிள்ளை காலனி, சூளேசுவரன் பட்டி அஞ்சல், பொள்ளாச்சி.
பி: தாராபுரம், கோவை மாவட்டம், 15-12-1926. அ. பி. மொ: தெலுங்கு. நூல்: பேசும் நிலா 1952 (சிறுவர் நூல்), குல விளக்கு 1954, மோகன வடிவு 1954, அமுத சுரபி 1956, அத்தை மகன் 1961 (நான்கும் நாடகம்).

**மாணிக்கவேலு நாயக்கர். சி. ஆர். B.A.**
10, புதுத் தெருவு, காகிதப்பட்டடை, வேலூர்.
பி: சென்னை, 28-5-1882. அ. பி. மொ: ஆங்கிலம். 16 ஆண்டுகளாகத் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதி வருகிறார்.

**மாதவன். ச.**

280, முனியம்மன் கோயில் தெரு, துரைச்சாமிபுரம், இராஜ பாளையம்.

பி: பெத்துரெட்டி பட்டி, இராமநாதபுர மாவட்டம், 6-6-29. 10 ஆண்டுகளாக நாடகம், கவிதை, சிறுகதை எழுதி வருகிறார்.

**மாயாண்டி பாரதி. ஐ.**

70, மேலமாசி வீதி, மதுரை-1.

பி: மதுரை, 1917. அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம். நூல்: படுகளத்தில் பாரத தேவி 1939, எத்தனை அடிநிலம் 1939, புதிய தமிழ் நாடு 1945, கலப்பு மணம் 1955, பட்ட தாரிகள் 1955 (ஐந்தும் கட்டுரைகள்).

**மாரிசாமி. எஸ். எஸ்.**

15, ஷெனாய் நகர், சென்னை-30.

பி: மதுரை, 15-6-1920. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: அயர்லாந்து 1940, அமெரிக்கா 1946 (இரண்டும் வரலாறு), தோமோகன் 1948, பாண்டிய குமாரன் 1949, அழகம்மாள் 1952 (மூன்றும் நாவல்) முதலிய 50. மொ. பெ: ஆயிரத் தொரு இரவுகள். 'அமெரிக்கா' என்னும் நூல் சென்னை அரசினர் பரிசு பெற்றது. கோவையில் நடந்த முதல் தமிழ் எழுத்தாளர் மாநாட்டின் பொதுச் செயலாளர் (1948-49), அமெரிக்க அரசாங்க அழைப்புக்கிணங்க, அமெரிக்காவில் சுற்றுப் பயணம் செய்தவர்.

**மார்க்கபந்து சர்மா. M.A.**

சுமைதாங்கி, காவேரிப்பாக்கம் வழி.

பி: சுமைதாங்கி, வ. ஆ. மாவட்டம், 26-11-1916. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: சிலம்பின் இரசனை 1948, சிலம்பின் பாயிரம் 1961, சிலம்பின் தகுதி 1961, சிலம்பின் பூக்கள் 1962, சிலம்பின் கொடிகள் 1963 (ஐந்தும் இரசனை) முதலிய 9.

**மாஸ்கரேனஸ் ரம்போலா. M.A.**

1, பிரிட்டோ காலனி, திருச்சி-2.

பி: தூத்துக்குடி, 14-10-1917. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: இலக்கியப் பொழில், தமிழ்த் தொண்டர்கள், ஐந்து தமிழ் மணிகள், இனிய கதைகள், கட்டுரை எழுதுவது எப்படி? முதலிய 11.

**மீரான். ஏ. எம்.**

*19, மடுவின் கரைத் தெரு, ஆலந்தூர், சென்னை-16.*

*பு. பெ: கண்ணம்மா, மார்த்தாண்டன், ராதா, டி. ராதா கிருஷ்ணன், மீயன்னு, நகைவாணன். பி: செங் கோட்டை, திருநெல்வேலி மாவட்டம், 20-8-1932. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: இமாம்சா அதி 1963 (வரலாறு), ஆயிரங்காலத்துப் பயிர் 1960 (சிறுகதைத் தொகுப்பு), அல்லாமா இக்பால் பொன்மொழிகள் 1962 (தொகுப்பு), குயில் பூங்கா மர்மம் 1958, பவழம் திருடிய பட்டுக் கை 1959 (இரண்டும் துப்பறியும் நவீனம்) முதலிய 40 நூல்கள். 'பிறை' (மாத இதழ்) ஆசிரியராக ஏழாண்டு பணி யாற்றியவர்.*

**மீனலோசனி. ப.** M.A.

*8-எச், பைகிராப்ட்ஸ் சாலை, சென்னை-5.*

*பு. பெ: தென்னவன் கொடி. பி: சென்னை, 27-8-1942. அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம். ஏழு ஆண்டுகளாகக் கவிதை, கதை, ஆராய்ச்சிக் கட்டுரை எழுதி வருகிறார். பல கவிதை, கட்டுரைப் போட்டிகளில் பரிசு பெற்றிருக்கிறார்.*

**மீனாட்சிசுந்தரம். டி. டி.** B.A., B.L.

*C. 28. பதினோராவது கிராஸ் தெரு, தில்லை நகர், திருச்சி.*

*பி: திருச்சி, 1-6-1919. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: ஓவியம் செய்தவேலை 1952, வஸந்த சேனா 1953 (இரண்டும் நாடகம்). எழில் மிகு எமிலி 1964, காதலோ காதல் 1958, அகல்யா 1953, (மூன்றும் கவிதை) முதலிய 10. ஆங்கிலத் தில்: My Visit to America and other Countries. முன்னாள் அண்ணாமலைப் பல்கலைக் கழக ரிஜிஸ்டிரார்.*

**மீனாட்சிசுந்தரம் பிள்ளை. இராம.** M.A.

*பேராசிரியர், வேளாண் கல்லூரி, கோவை-3.*

*பு. பெ: மீனவன், நக்கீரனார், ஆந்தையார். பி: புதுக் கோட்டை, 15-12-1918. அ. பி. மொ: சம்ஸ்கிருதம், இந்தி, உருசிய மொழி. மாஸ்கோ வானொலி வாசகராகவும், மொழி பெயர்ப்பாளராகவும், நிருபராகவும் இருந்து பணி யாற்றியவர். மாஸ்கோவில் நடந்த பாரதி விழா, புஷ்கின் பிறந்தநாள் விழா, அனைத்து நாட்டு இந்தியக் கலையறிஞர் கழகத்து வெள்ளி விழா முதலியவற்றில் பங்கு கொண்டவர். தாஷ்கண்டில் 1958-ல் நடந்த ஆசிய ஆப்பிரிக்க எழுத் தாளர் மாநாட்டில் தமிழ் எழுத்தாளர் சங்கப் பிரதிநிதி யாகக் கலந்து கொண்டவர். 1958-ல் மக்கள் சீனாவில் உள்ள 30க்கும் மேற்பட்ட எழுத்தாளர் சங்கங்களுக்குச் சென்று அளவளாவி வந்தவர். தமிழ் இலக்கியம் பற்றிச் சீன மொழி பெயர்ப்பாக இவரது மூன்று கட்டுரைகள் பீகிங் பத்திரிகை ஒன்றில் வெளிவந்துள்ளன. 25 ஓற்றையங்க நாடகங்களின் ஆசிரியர். கல்லூரிகளுக்காகப் பல நாடகங் களை எழுதியும் இயக்கியும் இருக்கின்றார்.*

**மீனாட்சிசுந்தரன். தெ. பொ.** B.A., B.L., M.O.L., வித்துவான்.

துணைவேந்தர், மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை.

பி: சிந்தாதிரிப்பேட்டை, சென்னை, 8-1-1901. அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம், கன்னடம், தெலுங்கு, இந்தி, சம்ஸ்கிருதம், பிரஞ்சு, ஜெர்மன். நூல்: பிறந்தது எப்படியோ? 1951 (கட்டுரை), தமிழா நினைத்துப் பார்! 1954 (சமுதாயம்), சமணத் தமிழ் இலக்கிய வரலாறு 1961 (வரலாறு), சயாமில் திருவெம்பாவை, திருப்பாவை 1961 (பண்பாடு), கவி இரவீந்திரநாத தாகூர் 1961 (வாழ்க்கை) முதலிய 16. ஆங்கிலத்தில்: Mullai-P-Pattu, Collected Papers, A History of Tamil Literature. மொ. பெ: கால்டு வெல் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்.

**முகம்மது முஸ்தபா. மீ.**

9A, சிவகங்கா சாலை, நுங்கம்பாக்கம், சென்னை-34.

பு. பெ: மணவை முஸ்தபா, நச்சினார்க்கினியன். பி: பிலாறு, மதுரை மாவட்டம், 15-6-1935. அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம், இந்தி, சம்ஸ்கிருதம். மொ. பெ: மாதிரி இலட்சாதிபதி 1966 (சிறுகதைத் தொகுப்பு). கல்லூரி இலக்கியப் போட்டிகளில் மாநில முதற் பரிசுகள் பல பெற்றவர். தென்மொழிப் புத்தக டிரஸ்ட் பதிப்பாசிரியர். 'புத்தக நண்பன்' (மாத இதழ்) சக ஆசிரியர்.

**முத்துக்குமரன். அ. வை. (ஏ.வி.எம். குமரன்)**

தாண்டவன் குப்பம், நெய்வேலி-2, தெ. ஆ. மாவட்டம்.

பு. பெ: கலைச்செழியன். பி: நாட்டார் மங்கலம், தெ. ஆ. மாவட்டம், 11-5-1927. நூல்: கலை-கொலை (நாடகம்). ஐந்து ஆண்டுகளாகச் சிறுகதை நாடகம் எழுதி வருகிறார்.

**முத்துக்கிருஷ்ணன். ச.**

மு. வ. இல்லம், கெமிகல்ஸ் காலனி, மேட்டூர் அணை, R.S. சேலம் மாவட்டம்.

பு. பெ: ஞானபாரதி. பி: சத்தியமங்கலம், கோவை மாவட்டம், 17-5-1935. அ. பி. மொ: தெலுங்கு, ஆங்கிலம். 1956 முதல் நாடகம், கதை, கவிதை, கட்டுரை எழுதி வருகிறார். நாடகத்துறை இயக்குநர்; பாடலாசிரியர்; நடிகர்.

**முத்துக்கிருஷ்ணன். பு. ஆ.**

புதுப்பாளையம் அஞ்சல், திருவண்ணாமலை வழி, வ. ஆ. மாவட்டம்.

பி: புதுப்பாளையம், வ. ஆ. மாவட்டம், 16-7-1909. நூல்: எழுத்தறிவுப் பாடல் 1949 (கவிதை), அறிவுக் கதிர்—சிறுவர் உலகம் 1953 (பாப்பா பாடல்), திருக்குறள் இசை மலர் 1956 (தமிழிசை), குழந்தைப் பாக்கள் 1962, (மத்திய

அரசினரின் சிறுவர் இலக்கியப் பரிசு பெற்ற நூல்). தமிழக அரசினரின் நல்லாசிரியர் விருது பெற்றவர்.

**முத்துக்கிருஷ்ணன். வெ.**

*7, சீதை அம்மாள் காம்பவுண்டு, நரி மேடு, மதுரை-2.*

*பு. பெ: கலைக்கண்ணன், காரல்முகி. பி: அருப்புக்கோட்டை, இராமநாதபுர மாவட்டம், 17-4-1923. அ. பி. மொ: ஆங்கிலம். 1942 முதல் சிறுகதை எழுதி வருகிறார்.*

**முத்துக்குமாரசாமி. இரா. M.A., B.L.**

*3, மேட்டுத் தெரு, சென்னை-1.*

*பி: சென்னை, 2-12-1936. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: கழக 1008 நூல்களின் பாராட்டு விழா நூற்பட்டி 1961 (நூலகத் துறை). மொ. பெ: வேஃபீல்ட் பாதிரியார்* (Vicar of Wakefield), *கருமணி மலர்* (Black Tulip by Dumas), *தாயத்து* (Tausman by Scott), *கடத்தப்பட்ட டேவிட்* (Kidnapped).

**முத்துசாமி. ஏ. எஸ்.**

*முத்து போட்டோ ஸ்டூடியோ, குடியாத்தம்,* N.A.

*பு. பெ: கார்க்கிநேசன். பி: அன்மருதை வ. ஆ. மாவட்டம், 26-11-1927. நூல்: நிலமளித்த வள்ளல் 1954 (சிறுகதை). தியாகச் சின்னம், கடமை, யார் சொத்து முதலிய பல நாடகங்களின் ஆசிரியர்; கவிஞர்; நாடக இயக்குநர்.*

**முத்துசாமி. எ.**

*22, குடந்தை சாலை, திருவையாறு, தஞ்சாவூர் மாவட்டம்.*

*பு. பெ: எ. கலைமுகிலன். பி: செய்யாமங்கலம், தஞ்சை மாவட்டம், 10-7-1937. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: வெற்றிச் செல்வி 1963 (நாவல்), அன்புக் கதைகள் 1963 (சிறுவர் கதை), புதிய ஒளி 1965 (சிறுகதைகள்), சித்தரஞ்சனதாஸ் 1965 (சிறுவர்க்கு), மருந்தாகும் மரங்கள் 1966 (கட்டுரைகள்) முதலியன. 'மன்றம்', 'அறப்போர்', 'முல்லை' இதழ்களில் துணையாசிரியராகப் பணிபுரிந்தவர்.*

**முத்துராமன். சொ. அ.**

*86, திருக்கச்சி நம்பி தெரு, சி. காஞ்சிபுரம்.*

*பு. பெ: சீயேயெம். பி: வேளாங்கண்ணி, தஞ்சை மாவட்டம், 27-9-1929. அ. பி. மொ: ஆங்கிலம். 15 ஆண்டுகளாக எழுதி வருகிறார்.*

**முத்துரெத்தின பாரதியார். திரு.**

*கருவை பாரதி மன்றம், வ. உ. சிதம்பரம் தெரு, கரூர்.*

*பி: பெருமான்பட்டி, திண்டுக்கல் மாவட்டம், சோபகிருது ஆடி 15. அ. பி. மொ: சம்ஸ்கிருதம். நூல்: பாரதிக் குறள், தேசீய கீதங்கள், இசைப் பூங்கா, காந்தியம். மொ. பெ: வேத ஸ்லோகங்கள் (சம்ஸ்கிருதத்திலிருந்து).*

**முத்து வீரப்ப முடிராஜ். மே. நா.**

மோகனூர், நாமக்கல் தாலூகா, சேலம் மாட்டம்.

பி: கடத்தூர், கோவை மாவட்டம், 4-6-1909. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: பக்தியானந்த பஜனைப் பதங்கள் 1931, முத்துராஜ மக்கள் முன்னேற்றப் பாடல்கள் 1945, சம்பூர்ண ராமாயண ஓயிற் கும்மிப் பாடல்கள் 1952, மது விலக்குக் கீதம் முதலியன.

**முத்தையன். க. பா.**

26, வேளாளர் தெரு, புலியூர், சென்னை-24.

பு. பெ: பால்முத்து. பி: கல்லூர், திருநெல்வேலி மாவட்டம். 1-7-1927. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: மந்திரவாதி மகேந்திரன் 1963, தங்கச் சிலை 1964, (இரண்டும் சிறுவர் நூல்), மொ. பெ: கிரேக்கம் 1963 (இலக்கிய வரலாறு).

**முத்தையா. எம். டேவிட்.**

5 ஏ, டெய்லர்ஸ் எஸ்டேட், முதல் தெரு, இரண்டாவது மாடி, கோடம்பாக்கம், சென்னை-24.

பு. பெ: மொ. இளங்கோவன். பி: திண்டுக்கல், 14-6-1936. அ. பி. மொ: ஆங்கிலம், தெலுங்கு, மலையாளம், இந்தி. பத்து ஆண்டுகளாகச் சிறுகதை, நாடகம், கட்டுரை எழுதி வருகிறார். தெலுங்கு, மலையாளச் சிறுகதைகளைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

**முத்தையா. கண.**

576, பைகிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி, சென்னை-5.

பி: மதகுபட்டி, இராமநாதபுர மாவட்டம், மே 1914. அ. பி. மொ: ஆங்கிலம், ஹிந்தி. மொ. பெ: வால்காவி லிருந்து கங்கை வரை, பொது உடைமைதான் என்ன ?. இவர் இந்திய தேசிய இராணுவத்தில் II லெப்டினண்டாக மூன்று ஆண்டுகள் சேவை செய்தவர். தமிழ் எழுத்தாளர் சங்கத் துணைச் செயலாளர்(1956—58); தமிழ் எழுத்தாளர் சங்கப் பொருளாளர் (1966); தமிழ்ப் புத்தகாலய உரிமை யாளர்.

**முருகதாஸ். பித்துக்குளி.**

14 A, குப்பையர் தெரு, சென்னை-1.

பி: கோவை, 25-1-1920. நூல்: குஹாஞ்சலி 1953, தேவி புகழ் 1958, அன்னையும் அசட்டு மைந்தனும், பழியும் பாவமும்.

**முருகரத்தனம். தி. B.A. (Hons), M.Litt.**

தமிழ்த் துணைப் பேராசிரியர், மாநிலக்கல்லூரி, சென்னை-5.

பி: திருச்செங்கோடு, சேலம் மாவட்டம், 2-10-1934. அ. பி. மொ: ஆங்கிலம். நான்கு ஆண்டுகளாகக் கட்டுரை கள் எழுதி வருகிறார்.

**முருகானந்தம். கா.**

கலைக் கதிர், கோயமுத்தூர்—18.

பு. பெ: இன்ப வண்ணன். பி: திருச்செந்தூர், திருநெல்வேலி மாவட்டம், 1931. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: உதய கன்னி 1952 (தேசியப் பாடல்கள்), சிறுவர் சோலை 1961, பொம்மை வீடு 1962 (இரண்டும் குழந்தைப் பாடல்கள்), பழங்கால உலக அதிசயங்கள் 1964 (குழந்தை இலக்கியம்), கண்டு கற்போம் (முதியோர்க்கு) முதலிய 10.

**முருகு சுந்தரம். தி. M.A. புலவர்**

பெரமனூர், சேலம்-7.

பி: திருச்செங்கோடு, சேலம் மாவட்டம், 20-12-1930. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. நூல்: தமிழகத்தில் குறிஞ்சி வளம் 1962 (பிரயாண நூல்), வள்ளுவர் வழியில் காந்தியம் 1960, காந்தியின் வாழ்க்கையிலே 1963 (இரண்டும் கட்டுரைகள்), கென்னடி 1966 (வரலாறு), சந்தனத் தாமரை (கவிதை). 'ஆனந்த விகடன்' பாரதி மலர் கவிதைப் போட்டியில் பரிசு பெற்றவர்.

**முருகேச முதலியார். எஸ்.**

51, அய்யப்ப செட்டித் தெரு, சென்னை-1.

பி: விழப்பள்ளம், குறிஞ்சிப்பாடி, தெ. ஆ. மாவட்டம், 14-12-1914. நூல்: சங்கத் தமிழ் இலக்கியக் காட்சிகள் 1957, தாகூரும் காந்தியடிகளும் 1948.

**முருகேச முதலியார். நல். B. A.**

15, டாக்டர் சதாசிவம் ரோடு, சென்னை-17.

பி: சென்னை, 22-4-1905. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை 1958 (உரை), சைவ சித்தாந்தமும் அதன் சிறப்பும் 1959. தலைவர், சைவசித்தாந்த மகாசமாஜம். (Vice President: Academy of Tamil Culture (1959-66)

**முருகேசன். சு.**

பழைய T. V. S. ஷெட் சந்து, தேனி, மதுரை மாவட்டம்.

பு. பெ: தேனி முருகேசன். பி: தேனி, 11-3-1935. பதினாறு ஆண்டுகளாகச் சிறுகதை, சிறுவர் இலக்கியம் எழுதி வருகிறார்.

**முருகேசன். வ.**

சின்ன அல்லாபுரம், வேலூர்-3. வ. ஆ. மாவட்டம்.

பு. பெ: நீலவன். பி: சின்ன அல்லாபுரம், 3-6-1944. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: புத்துணர்ச்சிப் பாடல்கள் 1959, மக்கள் கவிஞர் இரங்கற் பாடல்கள் 1962. மேடை நாடகங்களுக்கும் கதை, வசனம், பாடல்கள் எழுதியும் நடித்தும் இருக்கிறார்.

முல்லை முத்தையா. பி. எல்.

*59, பிராட்வே, சென்னை-1.*

*பு. பெ: ஆனந்தன். பி: தேவகோட்டை, இராமநாதபுர மாவட்டம், 7-6-1920. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: வேடிக்கை மனிதர் புதுமைப்பித்தன், திருமணமும் இன்ப வாழ்க்கையும், சுவாரஸ்ய விருந்து, பஞ்சாயத்துச் சட்டம், வியாபார வெற்றிக்கு 1000 ஆலோசனைகள், முதலிய 41 மொ. பெ: அன்னாகரினா, அதிசய மாளிகை, இந்தியா வின் கதை, மேடம் பவாரி, ஐந்து சகோதரிகள் முதலியன. 'தமிழகம்' உரிமையாளர்.*

முல்லை வளவன். B.A., B.T.

*23-A, ரெட்ரீட், ஏர்க்காட்டுச்சாலை, அஸ்தம்பட்டி, சேலம்-7.*

*பு. பெ: கா. மு. வ. பி: தொண்டியபட்டி, சேலம், 15-10-1939. அ. பி. மொ: ஆங்கிலம். ஐந்து ஆண்டுகளா கச் சிறு கதை, கவிதை, கட்டுரை எழுதி வருகிறார்.*

முனிரத்தினம். அ.

*21, பாரதியார் வீதி, காட்டுப்பாடி. வ. ஆ. மாவட்டம்.*

*பு. பெ: அறிவுச்சுடர். பி: காட்டுப்பாடி, 12-2-1934. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி, தெலுங்கு. 1958 முதல் கதை, கவிதை, நாடகம் எழுதி வருகிறார்.*

முஹம்மது கவுஸ். எம்.

*3/149, அங்கப்பநாயக்கன் தெரு, சென்னை-1.*

*பு. பெ: கவுஸ். பி: திருச்சி, 24-5-1922. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி, உர்தூ, அரபி. நூல்: இறையருள் ஞானம் (அறிவியல்). மொ. பெ: இமாம் கஸ்ஸாலியின் கடிதங்கள் (உர்தூவிலிருந்து), இஸ்லாமும் இன்னிசையும் (அரபி இலக் கியத்திலிருந்து), மக்களும் நதிகளும்* (Men and Rivers by Humayun Kabir).

முஹம்மது காசீம். எஸ். எம். எஸ்.

*12, ஷேக் மதார் தெரு, இளையான்குடி அஞ்சல், இராமநாத புரம் மாவட்டம்.*

*பு.பெ: ஷேக்கோ. பி: இளையான்குடி, 3-5-1929. அ.பி.மொ: ஆங்கிலம். நூல்: இறைவன் இல்லை? 1954, மதம் அவசியமா? 1954, மாணவ மணிகளே! 1960 (மூன்றும் ஆராய்ச்சி), காதலில் வைத்த கொள்ளி 1960 (சரித்திர நாவல்), சொர்க்க வாசல் 1963 (கதைத் தொகுப்பு).*

மூர்த்தி ப. கி.

*1, ஈடிக வீதி, கிருஷ்ணாபுரம், ஆம்பூர், வ. ஆ. மாவட்டம், 1-7-1939. அ. பி. மொ: ஆங்கிலம், தெலுங்கு.*

நூல்: ஆயிரத்தில் இருவர் 1961. (சிறுவர் நாவல்). பள்ளி ஆசிரியர்.

**மூர்த்தி. வி. கே.**

C. 270, அசோக் நகர், (கோடம்பாக்கம் புதூர் காலனி) சென்னை-33.

பு. பெ: கௌசிகன், வாண்டுமாமா. பி: தஞ்சை, 1-7-1926. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: அடிமை யின் தியாகம் (சரித்திரச் சிறுகதை), பாமினிப் பாவை 1965 (சரித்திர நாவல்), காரியதரிசி உமா, பண்பு தந்த பரிசு, வீணையின் நாதம் (மூன்றும் சிறுகதைத் தொகுப்பு), 30 க்கு மேற்பட்ட சிறுவர் நூல்கள். 'கல்கி' உதவி ஆசிரியர்.

**மூர்த்தி. வீ. ப. க.**

22, முதலியார் தெரு, திருப்பாலைத்துறை, பாபநாசம், தஞ்சை.

பு. பெ: சூரிய ராசா, சோலையப்பர், இராசகனகர், கதிர வன், வீபக. பி: திருப்பாலைத் துறை, 5-5-1937. அ. பி. மொ: ஆங்கிலம். 1955 முதல் சிறுகதை, நாடகம், சிறுவர் இலக்கியம் எழுதி வருகிறார். அரிசன நல இலாகாப் பள்ளியொன்றின் தலைமையாசிரியர்.

**மோகனசுந்தரன். சிறுவை.**

'தமிழகம்', 27, பிள்ளையார் கோயில் தெரு, தண்டையார்ப் பேட்டை, சென்னை-21.

பு. பெ: சிறுவை, நச்சினார்க்கினியன். பி: சென்னை, 18-9-1916. அ. பி. மொ: ஆங்கிலம், தெலுங்கு. நூல்: ஜீவபந்து டி. எஸ். ஸ்ரீபால் வாழ்க்கை வரலாறு 1959 (வரலாறு). மொ. பெ: ஜார்ஜ் வாஷிங்டன் 1957, சார்லஸ் ஸ்டெயின்மெட்ஸ் 1962, அட்மிரல் பெர்ட் 1962. 1931 ல் சென்னை மாணவர் மன்றத்தைத் தோற்றுவித்தவர். 1941 ல் நக்கீரர் கழகத்தைத் தோற்றுவித்து, அதன் அங்கங்களாகத் திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரியையும், மறைமலையடிகள் ஆராய்ச்சிக் குழுவையும் செயலாளராயிருந்து இயக்கி வருகிறார்.

**மோகனரங்கம். கா. ந. M.A.**

27, அருண்டேல் தெரு, மைலாப்பூர், சென்னை-4.

பி: செங்கற்பட்டு, 27-7-1922. அ. பி. மொ: ஹிந்தி, ஆங்கிலம். இருபது ஆண்டுகளாகச் சிறுகதை, கட்டுரை, நாவல் எழுதி வருகிறார். சென்னை வானொலி நிலையத்தில் நிகழ்ச்சி நிர்வாகஸ்தர்.

**மோகன். எஸ்.**

30, மேலக்கடலங்குடித் தெரு, குடந்தை.

பு. பெ: செயலன். பி: குடந்தை, தஞ்சை மாவட்டம்

*8-10-1947.* அ. பி. மொ: ஆங்கிலம். ஐந்து ஆண்டுக ளாகச் சிறுகதை, சிறுவர் இலக்கியம் எழுதி வருகிறார்.

**மோகன். கே. வீ. எஸ்.**

*219,* ஜெம்பெட்டாத் தெரு, கொழும்பு-*13,* இலங்கை.

பு. பெ: கண்ணகி, மாதவி. பி: கொழும்பு, *30-5-1940.* அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: கென்னடியின் கதை *1965* (வரலாறு), ஏமாறச் சொன்னது நானா? *1966* (நாவல்). இருவர் உலா *1966* (வரலாறு). இலங்கையில் குழந்தை எழுத்தாளர் சங்கத்தைத் தோற்றுவித்தவர். 'கதம்பம்' (மாத இதழ்) ஆசிரியர்.



**ரகுநாதன். து. செ.**

துடுப்பதி அஞ்சல், (பெருந்துறை வழி), கோவை மாவட்டம்.

பு. பெ: துடுப்பதி ரகுநாதன். பி: துடுப்பதி, 13-10-1940; அ. பி. மொ: ஆங்கிலம். 1960 முதல் சிறுகதை எழுதி வருகிறார்.

**ரங்கநாதன். தி. ஜ.**

24, வி. ஸி. தோட்டம் முதல் தெரு, சென்னை-28.

பு. பெ: தி. ஜ. ர. பி: மேலவழுந்தூர், அய்யம் பேட்டை, தஞ்சை மாவட்டம், ஏப்ரல் 1901. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: சந்தனக் காவடி, மஞ்சள் துணி, விசைவாத்து (மூன்றும் சிறுகதை), எப்படி எழுதினேன்? (கட்டுரை), ரோஜாப் பெண் (சிறுவர்க்கு). மொ. பெ: ஒரே உலகம் (வெண்டல் வில்கீ), கூண்டுக்கிளி (ஹரிந்திரநாத் சட்டோபாத்யாவின் நாடகங்கள்). அவரது 'நொண்டிக்கிளி' (சிறுகதை), 'வண்ணாத்திப் பூச்சி' (சிறுவர்க்கு) இரண்டும் சென்னை அரசினர் பரிசு பெற்றவை. ஆசிரியர்: மஞ்சரி (மாத இதழ்).

**ரங்கநாயகி தாத்தம்.**

முதல் திருமாளிகை, ஸ்ரீரங்கம்.

பு. பெ: குமுதினி. பி: ஸ்ரீரங்கம், நவம்பர் 1905. அ.பி.மொ; ஆங்கிலம், இந்தி. நூல்: திவான் மகள் (நாவல்), நந்துவின் பிறந்த நாள் (சிறுகதை), சதாங்கம் (தொகுப்பு). மொ.பெ: கிராம இயக்கம் ஏன்?, ஏசுநாதர் போதனை (இரண்டும் ஜே. சி. குமரப்பா ஆங்கிலத்தில் எழுதியவை), குமுதினி (தாகூர்-வங்காளி மூலம்), லம்பகர்ணன் (பரசுராம்-வங்காளி மூலம்.)

**ரங்க–துரைவேலன்**

61/5, பழனி ஆண்டவர் கோவில் தெரு, சென்னை-23.

பு. பெ: ரதுலன். பி: இரங்கூன், பர்மா, 3-5-1925. அ. பி, மொ: ஆங்கிலம், பர்மிய மொழி, ஹிந்தி. மொ. பெ

கூற்றினும் வலிது 1964, அண்ணனும் தம்பியும் 1962, வாழத் தெரிந்தவன் 1966 (மூன்றும் மாப்பஸான் நாவல்). தாராஸ் புல்பா 1957 (கோகோல்), காப்டன் மகள் (புஷ்கின்) 1956 முதலிய 14. சில சிறந்த தமிழ்ச் சிறுகதைகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார்.

**ரங்கநாதன். எஸ். டி.**

ஹிந்தி பண்டிட், கவர்மெண்ட் ஹைஸ்கூல், கள்ளிப்பட்டி (P. O.), வழி ஈரோடு. பி: மேட்டுப்பாளையம், கோயமுத்தூர் மாவட்டம், 11-10-1911. அ. பி.மொ: கன்னடம், ஹிந்தி, ஸம்ஸ்கிருதம், தெலுங்கு. நூல்: காரமடை ஸ்தல புராணம் 1942, பாலமலை ஸ்தலபுராணம் 1944, மொண்டிபாளையம் ஸ்தல புராணம் 1944, மகாத்மாவின் வைபவம் 1948, பாத்மோக்த ஆராதன விதி 1962 (ஐந்தும் ஆராய்ச்சி.)

**ரங்கநாதன். கி. B.A.**

59, அப்பர்சாமி கோயில் தெரு, மைலாப்பூர், சென்னை-4.

பி: திருவல்லிக்கேணி, சென்னை, 7-8-1938. அ. பி. மொ: சம்ஸ்கிருதம், இந்தி. கடந்த இரண்டு ஆண்டுகளாகச் சிறுகதைகள் எழுதி வருகிறார்.

**ரங்கநாயகி. எஸ்.**

11, அபிராமபுரம் இரண்டாவது தெரு, சென்னை-18.

பி: சென்னை, 24-5-1924. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. நூல்: இருமனம், நினைவு முகம், நீரோட்டம் (மூன்றும் நாவல்), தியாகத்தின் மடியில் (கதைத் தொகுப்பு), மாயக் கிளி (சிறுவர் இலக்கியம்) முதலிய 9. 'நினைவு முகம்' கன்னடத்தில் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளது.

**ரங்கமணி. ஏ. டி.**

அரையப்பாக்கம், கருங்குழி அஞ்சல், செங்கை மாவட்டம்.

பு. பெ: மைலாமணி, சிம்மம். பி: அரையப்பாக்கம், செங்கற்பட்டு மாவட்டம். 12-10-1930. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: அன்னையின் அன்பு 1961 (குழந்தை நாவல்), போட்டி பஸ் 1962 (சிறுகதை தொகுப்பு). இதயத்தில் ஓர் இடம் 1962, யாருக்கு யாரோ 1965, (இரண்டும் நாவல்கள்.) மாஸ்டர் மாது 1964 (சிறுவர் இலக்கியம்) முதலிய பத்து. மத்திய அரசினர் நடத்திய 'சிறுவர் இலக்கியப் பண்ணை'யில் பயிற்சி பெற்றவர்.

**ரங்கராஜன். எம். ஆர். M.A.**

B-2, இலயோலா காலனி தெரு, சூளைமேடு வீதி, சென்னை-24.

பு. பெ: ராஜரங்கன், பி: கும்பகோணம், தஞ்சை மாவட்டம், 8-7-1938. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம், ஜெர்மன். 1955 முதல் சிறுகதைகள் எழுதிவருகிறார். அறிவியல், வேதாந்தக் கட்டுரைகள் பலவற்றை ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்த்திருக்கிறார்.

**ரங்கராஜன். ரா. கி.**

*11, ஆதியப்ப முதலி தெரு, சென்னை-7.*

பு. பெ: சூர்யா, அவிட்டம். பி: கும்பகோணம், தஞ்சை மாவட்டம், 5-10-1927. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: சுமை தாங்கி 1956, இது சத்தியம் 1964, முதல் மொட்டு 1964 (மூன்றும் நாவல்கள்), பல்லக்கு 1960, நிலா நனையுமா? 1964 (இரண்டும் சிறு கதைகள்). 'பல்லக்கு' என்ற சிறுகதை தமிழ் எழுத்தாளர் சங்கம் முதற் பரிசு பதக்கம் பெற்றது. சுமைதாங்கி, இது சத்தியம் இரண்டும் திரைப்படமாக்கப்பட்டுள்ளன. 'குமுதம்' உதவி ஆசிரியர்.

**ரங்காச்சாரி. கே. எஸ்.**

*271, ஜி, புது ரயில்வே காலனி, மதுரை-10.*

பு. பெ: சாரங்கா. பி: சென்னை, 15-3-1929. அ. பி. மொ: ஆங்கிலம், கன்னடம். நூல்: பத்மினியின் காதல் 1952 (நாவல்.)

**ரமணி. கே. எஸ். வி.**

*357, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-14.*

பி: கும்பகோணம், தஞ்சைமாவட்டம். 18-4-1914. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம். 1937 முதல் சட்டுரை, கலை விமர்சனம் எழுதி வருகிறார்.

**ரமணி. வா. B. com.,**

*'அரவிந்தா', 64, காளிதாஸ் ரோடு, இராம்நகர் கோவை-9.*

பி: கோவை, 10-4-1930. அ. பி. மொ: ஹிந்தி, ஆங்கிலம், தெலுங்கு, கன்னடம், மலையாளம். 1951 முதல் சிறுகதை, கட்டுரை எழுதி வருகிறார்.

**ரஜத். மணி, எஸ். B. com.**

*'ராஜ்ஸ்ரீ', 8. ராமச்சந்திர அய்யர் தெரு, தி. நகர், சென்னை-17.*

பு. பெ: ரஜத். பி: சென்னை, 14-10-1943. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி, பிரஞ்சு, ஜெர்மன். மூன்றாண்டுகளாக கவிதை, மொழிபெயர்ப்புகள் எழுதி வருகிறார்.

**ரஷீத். ந. அ.**

*51, பெரிய தெரு, திருத்தணி. செங்கை மாவட்டம்.*

பு. பெ: குன்றக்கோவன். பி: அம்மூர், வ. ஆ. மாவட்டம், 27-3-1927. அ. பி. மொ: உருது, ஆங்கிலம், தெலுங்கு. பதினாறு ஆண்டுகளாகச் சிறுகதை, கட்டுரை எழுதி வருகிறார்.

**ரஹீம் எஸ். ஏ.**

*4-65, ஜவஹர்லால் நகர், சென்னை-4.*

பி: கும்பகோணம், 1914. அ. பி. மொ: ஆங்கிலம், உருது. நூல்: வழிகாட்டிய உத்தமர், விடுதலை முழக்கம், புத்தர் அடிச்சுவட்டில் (மூன்றும் சிறுவருக்கு), அலைகடலுக்கப்பால்.

'வழிகாட்டிய உத்தமர்' ஆங்கிலம், இந்தி, கன்னடம், மராத்தி, தெலுங்கு ஆகிய மொழிகளிலும், 'விடுதலை முழக்கம்' இந்தியிலும் வெளியாகியுள்ளன. 'வழிகாட்டிய உத்தமர்' சென்னை அரசினர் பரிசும், அதன் இந்தி மொழி பெயர்ப்பு மத்திய அரசினர் பரிசும் பெற்றவை.

**ராகவன். ஏ. எஸ்.**

*24, எஸ். ஆர். எக்ஸ்டென்ஷன், ஸ்ரீரங்கம், திருச்சி-6.*

*பி: கரூர், திருச்சி மாவட்டம், 19-6-1928. அ. பி, மொ: ஆங்கிலம். நூல்: மலர்ந்த மனம் 1959, உயிர் நோன்பு 1960 (இரண்டும் நாவல்), அன்பின் வழி 1959, உணர்வின் விழிப்பு 1960 (இரண்டும் சிறு கதை).*

**ராகவன். வி. எஸ். வி.**

*128, பவழக்காரத் தெரு, சென்னை-1.*

*பு. பெ: இனியன், வசீகரன். பி: வேலூர், வட ஆர்க்காடு மாவட்டம், 23-12-1916. அ. பி. மொ: ஆங்கிலம். மொழி பெயர்ப்பு நூல்: இந்தியப் பெரியார்கள் 1962, மதத்தில் கிழக்கும் மேற்கும் 1964 (இரண்டும் தத்துவம்), பாஹியான் 1963, கௌதம புத்தர் 1963, யுவான் சுவாங் 1959, மூன்றும் பிரயாண வரலாறு) முதலிய 7 நூல்கள்.*

**ராகவன். வே.** M.A., P.hd. டாக்டர்

*7, ஸ்ரீ கிருஷ்ணபுரம் தெரு, சென்னை-14.*

*பு. பெ: புனர்வசு, ஆதித்யம். பி: திருவாரூர், தஞ்சை மாவட்டம், 22-10-1908. அ. பி. மொ: ஸம்ஸ்கிருதம், இந்தி, தெலுங்கு, மலையாளம், ஆங்கிலம். நூல்: வரலக்ஷ்மி விரதம் முதலிய கதைகள் 1950 (சிறுகதைகள்), கதைக் கடல் 1959 (மொழி பெயர்ப்பு), பரத நாட்டியம் 1959 (கலை-ஆராய்ச்சி). 'பரதநாட்டியம்' பிற தென்னிந்திய மொழிகளிலும் பெயர்க்கப்பட்டிருக்கிறது.*

**ராசசுந்தரம். கோ.** M.A., M.Litt.

தெற்கிருப்பு, அண்ணாமலை நகர் அஞ்சல், தென்னாற்காடு மாவட்டம்.

*பு. பெ: கோரா. சுந்தரம், கோராசு. பி: நாட்டார் மங்கலம், தெ. ஆ. 14-2-1938. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: மலரும் மதுவும் 1966 (நாடகம்).*

**ராதாகிருஷ்ணபிள்ளை. ம.** B.A., B.L.

*29, டாக்டர் ரங்காச்சாரி ரோடு, சென்னை-4.*

*பி: சென்னை, 18-12-1910. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: உரிமையும் கடமையும், தமிழர் வீரம், தென்னாட்டுக் கோயில்கள் (இரு பாகங்கள்), கம்பர் காட்டும் மகளிர்,*

வைணவமும் தமிழும் முதலிய 16. சென்னையின் முன்னாள் மேயர்.

**ராதாகிருஷ்ணன். பா.**

Accountant, Foundation for new Education, Reshivally P.o. Chitoore Dist.

பி: மாயூரம், தஞ்சை மாவட்டம், 4-3-1928. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. நூல்: வெள்ளிமலை 1962, வீரவேல் 1963, விஜயபூபதி 1963, வெற்றி 1963, உத்தமபுத்திரன் 1963 (சிறுவர் கதைத் தொகுப்பு) முதலிய 9 நூல்கள். 'வெள்ளிமலை' ஆனந்த விகடன் நாவல் போட்டியில் ரூ 2000 பரிசு பெற்றது.

**ராதாகிருஷ்ணன். வி. ஆர். B.A.**

1, திருவள்ளுவர் கோவில் தெரு, மயிலாப்பூர், சென்னை-4.

பு. பெ: சந்திரமணி. பி: வெங்கடாத்திரி அகரம், தெ. ஆ. மாவட்டம், 1922. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம். நூல்: தியாகியின் தாய் 1964, காந்தி தரிசனம் 1966 (இரண்டும் சிறுகதை), ஜனநாயக சோஷலிஸம் 1958 (கட்டுரை), காந்தீய சமதர்மம் 1960 (அரசியல்), லாலா லஜபதிராய் 1965 (வாழ்க்கை வரலாறு). 'ஜனதா', 'புது வாழ்வு' ஆசிரியராகப் பணியாற்றியவர். தமிழ் எழுத்தாளர் சங்க 14-ஆவது மாநாட்டு வரவேற்புக் குழுத் தலைவர் 1966.

**ராதாகிருஷ்ணன். வி.**

2, லியோனர்ட் தெரு, ராயப்பேட்டை, சென்னை-14.

பி: பொள்ளாச்சி, கோயமுத்தூர், 13-6-1922. அ. பி. மொ. ஆங்கிலம். நூல்: சோஷலிஸத்தின் பொருளாதாரப் பிரச்சினைகள் 1953, கற்பனை சோஷலிஸமும் விஞ்ஞான சோஷலிஸமும் 1956, நண்பனின் இதயம் 1962. 'ஜனசக்தி' உதவி ஆசிரியர்.

**ராமகிருஷ்ணன் பி. வி. B. SC.**

5, பலாத் தோப்பு. சென்னை-4

பு. பெ: பி. வி. ஆர். பி: கள்ளிக்கோட்டை, 27-7-1927. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: தங்கம் 1956, நீரோட்டம் 1957 (இரண்டும் நாவல்), தர்ம தரிசனம் 1959 (சிறுகதை), கனவுக் கிளி 1956, குயில் தோட்டம் 1956, (இரண்டும் குறு நாவல்).

**ராமகிருஷ்ணன். ஜி.**

8, சுப்பாரெட்டித் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை-33.

பு. பெ: கலாபாரதி, நவமணி. பி. நாகப்பட்டினம், தஞ்சை மாவட்டம், 25-10-1926. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம், இந்தி. நூல்: வேதாந்தக் கதைகள் 1966 (கதைத் தொகுப்பு), முருகன் புஜங்கப் பாமாலை 1966 (கவிதை).

**ராமசாமி. எஸ். எஸ். B.SC., B.L.**

துணை ஆசிரியர் "மித்திரன்", மவுண்ட் ரோடு, சென்னை-2.

பி: பாளையங்கோட்டை, 15-7-1912. அ. பி. மொ: ஆங்கி

லம். நூல்: அற்புத மருந்துகள், வானமண்டல யாத்திரை, டெலிவிஷன், வானத்தின் வண்ணக்கோலம் (யாவும் விஞ்ஞான நூல்கள்.) மொ. பெ: சூயஸ் கல்வாய் வரலாறு (History of Suez Canal), புற்று நோய் (Cancer), சுகப் பிரசவம் (Painless child Birth) முதலியன.

**ராமசாமி. என்.**

20, கணேஷ் தெரு, கோபாலபுரம், சென்னை-6.

பு. பெ: தமிலன். பி: கும்பகோணம், தஞ்சை மாவட்டம், 15-8-1904. அ. பி. மொ: இந்தி. நூல்: புனர்ஜன்மம் 1946, கிராம மோஹினி 1960, பசுபதி எம். எல். ஏ. 1964, (மூன்றும் நாவல்). மந்தைவெளி பஸ் 1961, டப்பாச்சி 1962 (இரண்டும் சிறுவர் கதை) முதலிய 20 நூல்கள்.

**ராமசுவாமி சாஸ்திரி. கே. எஸ். B.A., B.L.**

46, லாயிட்ஸ் ரோடு, ராயப்பேட்டை, சென்னை-14.

பி: கும்பகோணம், தஞ்சை மாவட்டம், 15-8-1878. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம். நூல்: வாழ்க்கைச் சக்கரம் (சிறுகதை). ஆங்கிலத்தில்: Rati vijayam, Sowdamini (Both Dramas.) ஓய்வு பெற்ற நீதிபதி.

**ராமச்சந்திரன். ஆ. ம. B.S.C., B.T.,**

59, முத்துநாய்க்கன் தெரு, சென்னை-1.

பு. பெ: மாயா, சாமான்யன், அரசியல் பித்தன், அமரா, குருதேவ். பி: சென்னை, 20-6-1933. அ. பி. மொ: ஆங்கிலம். சென்னை தமிழ்ச் சங்கத்தை நிறுவியவர். 1960 முதல் சிறுகதை, கட்டுரை எழுதி வருகிறார்.

**ராமச்சந்திரன். எம். என்.**

"அமுநாரா" பப்ளிகேஷன்ஸ், அரியலூர், திருச்சி மாவட்டம்.

பு. பெ: அமுநாரா. பி: அய்யம்பேட்டை, தஞ்சை மாவட்டம், 22-2-1929. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: சென்னை மந்திரிகள் 1957 (வாழ்க்கை வரலாறு), தமிழகத் தலைவர்கள் 1958 (தலைவர்களைப்பற்றி விமரிசனம்), தமிழக திரைப் பட வரலாறு 1959, திருச்சி மாவட்ட சரித்திர வரலாறு, தமிழ் நாட்டுப் பத்திரிகை வரலாறு 1963. 'கேள்வி-பதில்' மாத இதழ் 2 ஆண்டுகளும், Indian Industry ஆங்கில மாத இதழ் ஒரு ஆண்டும் நடத்தினார்.

**ராமச்சந்திரன். நா.**

117, மூன்றாவது மெயின் ரோடு, ஸி. ஐ. டி. நகர், சென்னை-15.

பி: வேலூர், 2-6-1925. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: குமுதம் 1947, முதல் தாம்பூலம் 1958.

**ராமச்சந்திரன். ரா. B.A.**

7, ஹனுமார் கோயில் தெரு, மேல மாம்பலம், சென்னை-33.

பு. பெ: பாட்டப்பத்து ராமச்சந்திரன். பி: பாட்டப்பத்து கிராமம், திருநெல்வேலி மாவட்டம், 23-10-1911. அ. பி. மொ: ஆங்கிலம், கன்னடம், இந்தி, தெலுங்கு, மலையாளம். 'தினமணி', 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' நிருபராக 33 ஆண்டுகளாகப் பணியாற்றி வருகிறார். சென்னை நிருபர்கள் சங்கம், சுருக்கெழுத்தாளர் சங்கத்தின் தலைவராக இருந்திருக்கிறார்.

**ராமநாதன். அரு.**

பிரேமா பிரசுரம், 63, யுனைடெட் இந்தியா காலனி, ஆர்க்காடு ரோடு, சென்னை-24.

பு. பெ: ராமையா. பி: கண்டனூர், இராமநாதபுரம் மாவட்டம், 7-7-1924. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: வானவில் 1948 (நாடகம்), கதாநாயகி 1952 (சிறுகதை), சிந்தனையாளர் பிளாட்டோ 1953 (வாழ்க்கை), அம்பிகாபதி 1954, பழையனூர் நீலி 1954 (இரண்டும் சிறுகதை) முதலியன. திரைக்கதை வசனகர்த்தா. ஆசிரியர்: 'காதல்' (மாத இதழ்). 'இராஜராஜ சோழன்' மேடைகளில் நடிக்கப்படுகின்றது.

**ராமநாதன். ஆர்.**

11, மக்ளீன் தெரு, சென்னை-1.

பி: 1915. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி, தெலுங்கு, மலையாளம். நூல்: மனிதன் 1948 (சமூக சாத்திரம்), சைனா எங்கே போகிறது 1948, அறிஞர் மார்க்ஸ் 1946, லெனின் பிறந்தார் 1947, வியெட்நாம் குடியரசு 1947, (நான்கும் அரசியல்). மொ. பெ: வானவில் (ருஷ்ய நாவல்), கூலி (முல்க்ராஜ் ஆனந்த்), சாக்கடையிலிருந்து (மலையாளம்: கேசவதேவ்) முதலிய 7. பாரத மித்திரன், சமுதாய ஊழியன், முன்னேற்றம் ஆகிய பத்திரிகைகளின் ஆசிரியராக இருந்தவர். தற்போது 'சோஷலிஸ்ட்' என்ற பத்திரிகையின் ஆசிரியராக இருக்கிறார்.

**ராமநாதன். எஸ். B.A.,**

7. A, சீனிவாசாச்சாரி தெரு, பெரம்பூர், சென்னை-11.

பு. பெ: சுருமீன், வானவன். பி: ராதாரி மங்கலம், தஞ்சை மாவட்டம், 3-11-1938. அ. பி. மொ: சம்ஸ்கிருதம், ஆங்கிலம். நூல்: அந்தச் சிலை 1959 (நாவல்). குழந்தை எழுத்தாளர் சங்கச் செயலாளராகவும், உதவித் தலைவராகவும் இருந்தவர். தற்போது அதன் இணைச் செயலாளர்.

**ராமநாதன். எஸ். எஸ்.**

2/78, செம்புதாஸ் தெரு, சென்னை-1.

பு. பெ: புனர்வசு. பி: போளூர், வ. ஆ. மாவட்டம், 1926. நூல்: மலர்ந்த மங்கை 1955 (சிறுகதை).

**ராமநாதன். வெ. கா. B.A., B.L.**

*1/3 A, டீ சில்வா ரோடு, சென்னை-4.*

*பி: சென்னை, 11-4-1893. அ. பி. மொ: ஆங்கிலம், தெலுங்கு. நூல்: மூன்று தங்க மாம்பழங்கள். மொ. பெ: மாதவீ கங்கணம் (R. C. Dutt எழுதிய நாவல்), துரதிஷ்ட முள்ள மூராது.*

**ராமபத்ர தீக்ஷிதர். நா. B. A.**

*206, லிங்க செட்டி தெரு, சென்னை-1.*

*பி: பின்னவாசல், பூவாளூர் அஞ்சல், திருச்சி மாவட்டம், 8-11-1889. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம்: நூல்: வேடிக்கைக் கதைகள் 1922, புரட்சி வாழ்க்கை (சிறுகதை).*

**ராமமூர்த்தி. து. B.A. (Hons.)**

*'துவாரகா', ஆதம்பாக்கம், சென்னை-26.*

*பு. பெ: 'து. ரா.' பி: சென்னை, 11-9-1916. அ.பி.மொ: ஆங்கிலம். நூல்: காளியின் கண்கள் (சிறுகதை), உடைந்த வளையல் (நாவல்).*

**ராமமூர்த்தி. நெ. சு.**

*6, வெங்கட ஐயர் தெரு, சென்னை-1.*

*பு. பெ: மூர்த்தி, ராஜப்பா. பி: சிறுவள்ளூர், வ. ஆ. மாவட்டம், 20-8-1929. அ. பி. மொ: ஆங்கிலம், தெலுங்கு. நூல்: தென்னாட்டுச் சிங்கம் 1959 (சரித்திரம்).*

**ராமமூர்த்தி. கே.**

*'சாலு', 24, கிருஷ்ணசாமி தெரு, அபிராமபுரம், சென்னை-18.*

*பு. பெ: சாலுசுதன், ராவண்ணா, ராதி. பி: கல்லிடைக் குறிச்சி, திருநெல்வேலி மாவட்டம், 1937. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. நூல்: தமிழ் நாடு டைரக்டரி யார் யார்? 1953, பாரதி பிறக்கட்டும் 1962 (கட்டுரை), கவி ஞர் நெஞ்சில் நேரு 1965 (கவிதைத் தொகுப்பு). சென்னை பாரதி இளைஞர் சங்கத்தின் தலைவர்.*

**ராமமூர்த்தி. பி**

*77, பெரிய மணியக்காரத் தெரு, செங்கல்பட்டு.*

*பு. பெ: தேவலோக நிருபர், ஜம். பி: முசிரி, திருச்சி, 12-3-1917. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம். நூல்: தேவலோக ரகசியம் 1948.*

**ராமமூர்த்தி. வி.**

*3/25, எட்வர்ட் எலியட்ஸ் சாலை, சென்னை-4.*

*பு. பெ: மயிலை மூர்த்தி. பி: சென்னை, 25-5-1932. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி, தெலுங்கு. மூன்றாண்டுக ளாகச் சிறுகதை, கட்டுரைகள் எழுதி வருகிறார்.*

**ராமமூர்த்தி. வி. B.A.**

61, புருஷோத்தம நகர், குரோம்பேட்டை, சென்னை-44.

பு. பெ: ராம்ஜி, ராமுடு, சி. ஐ. டி. பி: கும்பகோணம், தஞ்சை மாவட்டம், 7-7-1931. அ. பி. மொ: ஆங்கிலம், கன்னடம், சம்ஸ்கிருதம், இந்தி. நூல்: தென்னிந்தியக் கோட்டைகள் 1966. ஏழு ஆண்டுகளாகக் கட்டுரை, ஆராய்ச்சி எழுதி வருகிறார்.

**ராமரத்தினம். எம்.**

2, முத்தியாலு செட்டி தெரு, புரசைவாக்கம், சென்னை-7.

பு. பெ: கீதா, விஜய பாலா, கடம்பூர் கவிராயர். பி: கடம்பூர், செங்கற்பட்டு மாவட்டம், 4-2-1930. நூல்: ஜப்பான் குண்டு 1950, குதிரை வீரன் 1952, தவளை ராணி 1956 (மூன்றும் சிறுவர் கதை).

**ராமரத்னம். என்.**

C/o. தினமணி, எக்ஸ்பிரஸ் எஸ்டேட், சென்னை-2.

பு. பெ: என்னார். பி: கும்பகோணம், தஞ்சாவூர் மாவட்டம், 3-6-1910. அ.பி.மொ: ஆங்கிலம், தெலுங்கு, சம்ஸ்கிருதம். நூல்: காந்திஜியின் கட்டுரைகள் 1960 (தொகுப்பு நூல்). மொ. பெ: கென்னடியின் சுயசரிதை. 'ஆனந்த விகட'னில் 'என்னார்' என்ற பெயரில் நடைச் சித்திரங்கள் எழுதியவர்.

**ராமலிங்கம். குறிஞ்சி.**

4, சீனுவாச ரெட்டித் தெரு, தி. நகர், சென்னை-17.

பு. பெ: நேரியன். பி: குறிஞ்சிப்பாடி, தென்னாற்காடு மாவட்டம், 10-11-1922. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: சிங்காரச் சிலை 1958 (இலக்கியம்).

**ராமலிங்கம். மா. M.A.**

தமிழ்த் துணைப் பேராசிரியர், மாநிலக் கல்லூரி, சென்னை-5.

பு. பெ: எழில் முதல்வன். பி: தென்னடார், தஞ்சை மாவட்டம், 13-10-40. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: இனிக்கும் நினைவுகள் 1966 (கவிதை). 6 ஆண்டுகளாக சிறுகதை, நாவல், திறனாய்வு எழுதி வருகிறார்.

**ராமன். எஸ். கே.**

2/10, பிரசன்ன விநாயகர் கோவில் தெரு, மயிலாப்பூர், சென்னை-4.

பு. பெ: மாயாவி. பி: சாம்பூர் வடகரை, திருநெல்வேலி மாவட்டம், 2-10-1917. அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம். நூல்: சாமுண்டியன் சாபம் (சிறுகதைகள்), மறுமலர்ச்சி, வாடா மலர் (இரண்டும் நாவல்). அகதி (சிறுகதைகள்), இளமையின் குரல் (நாடகம்) முதலிய 47. அகில இந்திய வானொலியில் எழுத்தாளராகப் பணிபுரிகிறார். 'வாடா மலர்' 1953-ல் சென்னைத் தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசு பெற்றது. இவரது சிறுகதைகள், நாவல்களில்

பல, பிற இந்திய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

**ராமஸ்வாமி. எஸ். ஆர்.** M.A.

8, ராஜாஜி ரோடு, காந்தி நகர், மதுரை-13.

பு. பெ: கலைமாறன், ராஜாளி, ராமு, அஸ்வினி குமார். பி: தஞ்சாவூர், 23-10-1915. அ.பி.மொ: தெலுங்கு, கன்னடம், மலையாளம், இந்தி. 30 ஆண்டுகளாகச் சிறுகதை, நாடகம், கட்டுரை எழுதி வருகிறார். மதுரைத் 'தினமணி' உதவி ஆசிரியர்.

**ராமஸ்வாமி. கே. எஸ்.**

13/5, கோபதி நாராயணஸ்வாமி செட்டித் தெரு, சென்னை-17.

பு. பெ: குஷன். பி: புதுக்கோட்டை, 6-4-1916. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம். நூல்: ஷண்முக நாதம் 1963 (இசைப்பாடல்கள்). ஆங்கிலத்தில்: Yoga Annotation for Lalitha Sahasranam 1965 (Spiritual philosophy). சென்னை வானொலி நிலைய எழுத்தாளர். கடந்த 23 ஆண்டுகளில் 500 க்கும் மேலான நாடகங்கள் எழுதியுள்ளார். 'வஞ்சம்', 'ஏழையின் ஆஸ்தி' ஆகிய திரைப்படங்களுக்கு கதை, வசனம், பாடல் எழுதியுள்ளார். இவரது பாடல்கள் பல இசைத் தட்டுகளில் பதிவாகியுள்ளன.

**ராமஸ்வாமி. ப.**

14, ஆபீஸ் வெங்கடாசல முதலி தெரு, சென்னை-5.

பு. பெ: ப. ரா. பி: புத்தநேரி, திருநெல்வேலி மாவட்டம், 1904. அ.பி.மொ: ஆங்கிலம். நூல்: இந்தியா—சீனு—பாகிஸ்தான், போதி மாதவன் (சரிதை), பௌத்த தருமம், புத்தர் போதனைகள் (இரண்டும் சமய விளக்கம்), அலெக்சாந்தரும் அசோகரும் (வரலாறு) முதலிய 12. மொழிபெயர்ப்பு: அன்னை, காதல் என்பது இதுதானோ ?, உலகப் பழமொழிகள், உலக அறிஞர் சிந்தனைக் களஞ்சியம், சுதந்தரத்தின் தத்துவங்கள் முதலிய 13.

**ராமஸ்வாமி ஐயங்கார். தி.** B.A., B.L.

2, டாக்டர் அழகப்ப செட்டியார் சாலை, வேப்பேரி, சென்னை-7.

பு. பெ: D. R. பி: கூரம், செங்கற்பட்டு மாவட்டம், 9-3-1899. அ.பி.மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம். நூல்: தேசிக வரதன் 1932, பாரளமகாந்தியம் 1934. கோதா வரிணயம் 1957 (நாடகம்), திருச்சின்ன மாலை 1958, அருத்த பஞ்சகம் 1961 (இரண்டும் உரை) முதலிய 15.

**ராமு. ஏ. கே.**

அக்கமாபேட் (P.o), சங்ககிரி (Via), சேலம் மாவட்டம்.

பி: அக்கமாபேட், 31-3-42. அ. பி. மொ: இந்தி. நூல்: சந்திரா என் காதலி 1964 (நாவல்).

**ராமையா. பி. எஸ்.**

*103-A, புரசைவாக்கம் பெரியசாலை, சென்னை-10.*

பி: வத்தலக்குண்டு, மதுரை மாவட்டம், 24-3-1905. அ.பி.மொ: ஆங்கிலம், இந்தி (சிறிதளவு). நூல்: சினிமா 1943 (சினிமாத் தொழில் பற்றிய அறிவியல்), மலரும் மணமும் 1944, ஞானோதயம் 1955 (இரண்டும் சிறுகதைகள்), நந்தா விளக்கு 1956 (நாவல்), பிரஸிடெண்ட் பஞ்சாட்சரம் 1957 (நாடகம்). இவரது நாடகங்களில் சில ரேடியோவில் ஒலி பரப்பப்பட்டுள்ளது. இவர் பாரதியாரின் பாஞ்சாலி சபதத்தை மேடை நாடக வடிவமாக அமைத்திருக்கிறார்.

**ராம்கோபால். அ. B. A.**

நாடார் காலனி, போத்தனூர்.

பு. பெ: விசார்தேவ், விஜயா, கல்லணையான். பி: திண்டுக்கல், மதுரை மாவட்டம், 29-6-1927. அ. பி. மொ: ஆங்கிலம், ஹிந்தி, சம்ஸ்கிருதம். நூல்: பழப்பாதுகாப்பு 1963 (விவசாயம், கைத்தொழில் விஞ்ஞானம்). 'குடியரசு' உதவி ஆசிரியர்.

**ராமலிங்கம். கே.**

*19, பெருமாள் கோயில் தெரு, சென்னை-33.*

பு. பெ: தென்றல். பி: மொச்சி குளம், மதுரை மாவட்டம், 1-7-1935. அ. பி. மொ: ஆங்கிலம். 12 ஆண்டுகளாக எழுதிவரும் கவிஞர்.

**ராஜகோபாலன். கொடுமுடி.**

*34, தாண்டவராய முதலித் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5.*

பு. பெ: கொடுமுடி. பி: புலியூர் கிராமம், திருச்சி மாவட்டம், 11-11-1913. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: சாணக்கியனின் ஆட்சிக் கலை 1955. மாக்கியவெல்லியின் ஆட்சிக் கலை 1956, அரிஸ்டாட்டிலின் ஆட்சிக் கலை 1957, ஹாப்ஸின் ஆட்சிக் கலை 1958, லாக்கின் ஆட்சிக் கலை 1960 முதலிய 13. 1932-ஆம் ஆண்டிலிருந்து 1944-ம் வரை நடைபெற்ற சுதந்திரப் போராட்டங்களில் கலந்துகொண்டு சிறை சென்றவர். த. எ. ச. செயலாளராகப் பணியாற்றியவர்.

**ராஜகோபாலன். தி. ஸ்ரீ. B.A., L.T.**

*தலைமையாசிரியர், இந்து உயர்நிலைப் பள்ளி, சென்னை-5.*

பி: திருக்கண்ணபுரம், தஞ்சை மாவட்டம், 9-6-1907. அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம், தெலுங்கு. நூல்: அமலனாதிபிரான் உரை, திருவல்லிக்கேணிப் பெருமாள் பொன்னூசல் 1960, திருவல்லிக்கேணிப் பெருமாள் பிள்ளைமையின்பம் 1962, கண்ணபுரத் தாயார் 1964, திருக்கண்ணபுரக் கலம்பகம் 1966.

**ராஜகோபாலாச்சாரி.சக்கரவர்த்தி. பாரதரத்னு. B.A., B.L.**

நௌரோஜி ரோடு, சென்னை-10.

பி: துறைப்பள்ளி, ஒசூர் தாலூகா, சேலம் மாவட்டம், 1878. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: வியாசர் விருந்து, சக்கரவர்த்தித் திருமகன், கண்ணன் காட்டிய வழி, ஆத்ம சிந்தனை, ராஜாஜி கதைகள் முதலிய 40. ஆங்கிலத்தில்: Doctrine and way of life-Bhagavat Gita for the lay Reader, The way out, etc. 'கற்பனைக்காடு' (உருவகக் கதைகள்) ஆங்கிலம், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகியவற்றிலும், 'வியாசர் விருந்து' 'சக்கரவர்த்தித் திருமகன்' ஆங்கிலத்திலும் பல இந்திய மொழிகளிலும் வெளிவந்துள்ளன. 'சக்கரவர்த்தித் திருமகன்' சாகித்திய அகாடமிப் பரிசு பெற்றது. 'ஸ்ரீராமகிருஷ்ண உபநிஷதம்' சென்னை அரசினர் பரிசு பெற்றது. இந்தியாவின் முன்னுள் கவர்னர்-ஜெனரல்.

**ராஜகோபால். ஆர்.**

12, அருணாசல ஆசாரி தெரு, சேப்பாக்கம், சென்னை-5.

பு. பெ: வைரம். பி: வளவனூர், தெ. ஆ. மாவட்டம், 1-5-1918. அறிந்த பிறமொழிகள்: ஆங்கிலம். நூல்: சிரியுங்கள் 1964 (ஹாஸ்யத் தொகுப்பு.)

**ராஜசேகரன். எம். ஓ. B.A.**

தலைமையாசிரியர், சாலியார் விநாயகர் துவக்கப்பள்ளி, சுப்பராஜ மடம் தெரு, ராஜபாளையம்.

பி: ராஜபாளையம், 1-6-1940. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. நூல்: மழலைமொழி I 1962 (கவிதை), மழலைமொழி II 1966 (நேரு சாஸ்திரி நினைவு மலர்.)

**ராஜப்பா. சி. சு.**

பு. பெ: கம்பதாசன் பி: உலகாபுரம், 15-9-1916. நூல்: கனவு, கம்பதாசன் கவிதைகள் (இரண்டும் கவிதை), வெகுமதி (சிறுகதை), ஆதிகவி (நாடகம்), குழந்தைச் செல்வம் (சிறுவருக்கு) முதலிய 15.

**ராஜம்.**

176, லிங்கிச் செட்டித் தெரு, சென்னை-1.

பி: சென்னை, 4-1-1932. அ. பி. மொ: தெலுங்கு. நூல்: கேளுங்கள் ராதை, ஆகாத பூ (இரண்டும் நாவல்), நல்ல பாம்பு, சிற்பி மாயன், செஞ்சிராஜா (மூன்றும் சிறுவருக்கு) முதலிய 16.

**ராஜம்கிருஷ்ணன்**

7, Ramalnath Prasad Altinho, Panjam, Goa.

பு. பெ: கே. மித்ரா. பி: திருச்சி, 5-11-1925. அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம். நூல்: பெண்குரல் 1953, அமுத மாகி வருக 1965 (இரண்டும் நாவல்). நித்திய மல்லிகை அல்லி 1960 (சிறுகதை). அலைகள் 1965 (மூன்று குறுநாவல்

கள்), டாக்டர் ரங்காச்சாரி 1965 (வாழ்க்கை வரலாறு) முதலிய 14. 1953-ல் 'பெண் குரல்' என்ற நாவல் 'கலை மகள்' நாராயணசாமி ஐயர் பரிசு பெற்றது. 1950-ல் அகில உலகச் சிறுகதைப் போட்டிக்குக் 'கல்கி' நடத்திய போட்டியில், 'ஊசியும் உணர்வும்' என்ற இவரது கதை பரிசு பெற்றது. 1958-ல் 'ஆனந்த விகடன்' நடத்திய நாவல் போட்டியில் இவரது 'மலர்கள்' என்ற நாவல் ரூ. 5000/ பரிசு பெற்றது. மலையாள மொழியிலிருந்து பல சிறு கதைகளையும், கட்டுரைகளையும் தமிழாக்கம் புரிந்துள்ளார்.

**ராஜன். கே. எஸ். எஸ்.**

*12, காந்திஜி ரோடு, ஈரோடு.*

பு. பெ: விஜயாலயன், ஏகலைவன், இளங்கவி, கம்பன்தம்பி. பி: மங்கலம், சேலம் மாவட்டம், 12-8-1933. அ. பி. மொ: ஆங்கிலம். ஒன்பது ஆண்டுகளாக பல நாடகங்கள் எழுதி அரங்கேற்றியுள்ளார். 'இளைஞர் உலகம்' ஆசிரியர்.

**ராஜன். டி.**

ஹிந்தி ஆசிரியர், அறிவிப்பாளர், விவித் பாரதி, அகில இந்திய வானொலி நிலையம், திருச்சி.

பி: ஸ்ரீரங்கம், திருச்சி மாவட்டம், 1-1-1928. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி, உருதூ, மலையாளம், தெலுங்கு, கன்னடம், பஞ்சாபி, புஷ்டு, ஸிந்தி, குஜராத்தி, மராட்டி, பாரஸீகம், அரபி. சம்ஸ்கிருதம். சுமார் 18 ஆண்டுகளாகச் சிறுகதை, நாடகம், மொழிபெயர்ப்புகள் முதலியன எழுதி வருகிறார்.

**ராஜலட்சுமி-ராமமூர்த்தி**

*அடையார், சென்னை-20.*

பு. பெ: கோமகள். பி: அளக்குடி, தஞ்சை மாவட்டம், 22-5-1933. அ. பி. மொ: ஆங்கிலம், தெலுங்கு. நூல்: பனி மலர் 1964 (நாவல்), அன்பின் சிதறல் 1965 (நாவல்) கல்கி வெள்ளி விழா சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்றவர்.

**ராஜலக்ஷ்மி. வி.**

D/o. A. வெங்கட்ராமன், அட்வகேட், 'அனந்த நிலையம்', தாராபுரம், கோவை மாவட்டம்.

பு. பெ: ராஜீவி, பி: நஞ்சைத் தலையூர், கோவை மாவட்டம். அ. பி. மொ: ஆங்கிலம், சம்ஸ்கிருதம், இந்தி, கன்னடம். சுமார் ஆறு ஆண்டுகளாகச் சிறுகதை எழுதி வருகிறார்.

**ராஜவேலு. கு. M.A.**

*10, கோஷன் பிளாக், அரசாங்க மாளிகை, சென்னை-2.*

பி: சேலம், 20-6-1920. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: காதல் தூங்குகிறது, (கலைமகள் நாராயணசாமி அய்யர் பரிசு நாவல்) 1942, அழகு ஆடுகிறது, வானவீதி, காந்த

முள், தங்கச் சுரங்கம் (ஐந்தும் நாவல்) முதலிய 14 நூல்கள். சென்னை அரசாங்க மொழி பெயர்ப்புத் துறை இணை நெறியாளர்.

ராஜாமணி. ஏ. ஆர்.

*12/4*, W. E. Area, New Delhi-5.

பு. பெ: ஜெயஸ்ரீ. பி: சிதம்பரம், தெ. ஆ. மாவட்டம், *20-5-1931*. அ. பி. மொ: தெலுங்கு, இந்தி, ஆங்கிலம். *12* ஆண்டுகளாக அரசியல் கட்டுரை, சிறு கதை எழுதி வருகிறார்.

ராஜாராம். கு. B. SC., B. L.

*7*, மேலரத வீதி, சோழவந்தான், மதுரை ஜில்லா.

பி: வத்தலக்குண்டு, மதுரை மாவட்டம், *15-4-1925*. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: விஞ்ஞானமும் நாமும் *1954*, கடல் *1957* (இரண்டும் அறிவியல்), மீன் *1958*, மழை *1964*, இந்தியாவின் ஞானச் சுடர் *1966* (சிறுவர் இலக்கியம்-அறிவியல்). மொ. பெ: காற்று வெளியினிலே *1966*, ராக்கெட்டுகளும் விண்வெளிப் பயணமும் (அறிவியல்.) 'மீன்', 'மழை' இரண்டு நூல்களும் மத்திய அரசாங்க வெகுஜன இலக்கியத் திட்டத்தின்கீழ் பரிசு பெற்றவை.

ராஜு. தி. சா.

*10—3—3/16*, East Nehru Nagar, Secunderabad-*26*.

பி: தில்லை ஸ்தானம், தஞ்சை மாவட்டம், *15-8-1926*. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. நூல்: பாரதி வழி *1960*. பல சிறுகதை, நாவல்கள் எழுதிப் புகழ் பெற்றவர்.

ராஜு. ஸி. எஸ். B.SC.

*8*, கமலாபாய் தெரு, சென்னை-*17*.

பி: கும்பகோணம், தஞ்சை மாவட்டம், *6-12-1929*. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி, சம்ஸ்கிருதம். நூல்: சோர்டிக் காட்டின் பிடரிப் புலி *1963* (மொழிபெயர்ப்பு). தென்னிந்திய மொழிபெயர்ப்பாளர் மன்றக் கூட்டுச் செயலாளர்.

ராஜேச்வரி-பத்மநாபன்.

*8*, ஐந்தாவது மெயின் ரோடு, சென்னை-*28*.

பு. பெ: அநுத்தமா. பி. நெல்லூர், *16-4-1922*. நூல்: ஒரே ஒரு வார்த்தை *1950*, கேட்டவரம் *1951*, மணல் வீடு *1952*, (கலைமகள் நாராயணசாமி ஐயர் பரிசு நாவல்), ஜயந்திபுரத் திருவிழா *1954*, கௌரி (ஐந்தும் நாவல்), சலங்கைக் காக்காய் *1959* (சிறுவருக்கு) முதலிய *15*. 'பிரேம கீதம்' நாவல் சென்னை அரசினர் பரிசு பெற்றது. மொ. பெ: சேவைக்கு ஒரு சகோதரி (மூலம்: மானிகாஃ பெல்டன்.)

**ராஜேந்திர குமார்.**

J. Walter Thompson Company, Madras-6.

பி: கோயமுத்தூர், 2-1-1939. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. கடந்த மூன்று ஆண்டுகளாக நகைச் சுவைக் கதை, நாவல், நாடகம் எழுதி வருகிறார். நூல்: வால்கள்.

**ராஜேந்திரன். கி.**

1, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை-34.

பு. பெ: குட்டிகிருஷ்ணன், ஜெயந்தி. பி: சென்னை, 6-9-1935. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: பொங்கிவரும் பெரு நிலவு, நெஞ்சில் நிறைந்தவள், போர்முனை (மூன்றும் நாவல்), காலச்சக்கரம், கலைச் செல்வி (இரண்டும் சிறுகதை). 'கல்கி' துணை ஆசிரியர்.

**ராஜேஸ்வரி. எஸ்.**

'ராஜ்ஸ்ரீ', 8, ராமச்சந்திர ஐயர் தெரு, சென்னை-17.

பு. பெ: குயிலி. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. நூல்: குடும்பத்தின் குலவிளக்கு, மகளிர் கலை, ஒப்பனைக் கலை, நிட்டிங், இன்ப இல்லத்தரசி முதலிய 7 நூல்கள்.

**ருக்மிணி பார்த்தசாரதி. B. A.**

6, டாக்டர் அழகப்ப செட்டியார் தெரு, வேப்பேரி, சென்னை-7.

பி: சென்னை, 26-12-1935. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. சுமார் ஒன்பது ஆண்டுகளாகச் சிறுகதை, நாவல், நாடகம், கட்டுரை முதலியன எழுதி வருகிறார்.

**ரெங்கசாமி. எம்.**

ஆசிரியர், யூனியன் பள்ளி, பாவந்தூர், T. புதுப்பாளையம் P. O., (திருக்கோவிலூர் வழி).

பு. பெ: இளங்கதிர். பி: புலிப்பாறைப்பட்டி, இராமநாதபுர மாவட்டம், 23-7-29. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: சாந்தி 1953 (சிறுகதை), போ! (கட்டுரை), இளங்கோ (சிறுவர் நாடகம்).

**ரெங்கராசன். முத்து.**

89/4. கோம்பை, மதுரை மாவட்டம்.

பு. பெ: கோம்பைமுரசன். பி: கோம்பை, 12-12-1933. அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம், தெலுங்கு. ஐந்தாண்டுகளாகக் கவிதை எழுதிவருகிறார்.

**ரெங்கசாமி. ரா.**

c/o 'சோவியத் நாடு' அலுவலகம், *44,* தியாகராயா ரோடு, சென்னை-*17.*

பு. பெ: மாஜினி. பி: திண்டுக்கல், *20-6-1921.* அ. பி. மொ: ஆங்கிலம், தெலுங்கு. நூல்: சுவர்க்க பூமி *1949* (நாவல்), குலதெய்வம் *1950* (சிறுகதை). வெண்தாமரை *1956* (நாடகம்), வாழத்தான் வேண்டும் *1961* (நாடகம்) முதலிய *30.* மொ. பெ: உல்லாசக் குடும்பம், சகோதரி (ருஷ்ய நாவல்). 'ஜனசக்தி', 'தாமரை' துணை ஆசிரியராகப் பணியாற்றியவர்.

# ல

**லட்சுமி. ர.**

*12/7,* II Link Road, I. I. T., Madras. *36.*

பு. பெ: ரா. லெ. பி: *29-12-1912.* அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: மாண்டிஸோரி காணும் குழந்தை மாண்பு 1957 (ஆராய்ச்சி), சிரிப்பே பரிசு 1958 (வாழ்க்கைத் துணுக்கு கள்), சிறுவர் நாடகக் கதைகள் I, II. 1956, கதைத் தோப் பிலே 1956 (சிறுவர் இலக்கியம்). மாண்டிஸோரி அம்மை யாருடன் சேர்ந்து பத்து ஆண்டுகள் குழந்தைப் பணி புரிந்தவர்.

**லட்சுமி நாராயணன். கே. சி.**

*9, சுப்பிரமணிய நகர் முதலாவது தெரு, சென்னை-24.*

*பு. பெ: கருப்பையா. பி: சென்னை, 1930. நூல்: இலட்சியத் தளபதி 1958 (நாடகம்), பக்தவத்சலம் வாழ்க்கை வரலாறு 1964, ஜவஹரின் தத்துவம் 1962, நெய்வேலி தரிசனம் கண்டேன் 1960, ஜனநாயகப் பிரச்னைகள் 1966, முதலிய 60. தொகுப்பு: மக்கள் தலைவர் காமராஜ் 1963, நேருஜி நினைவுச் சொற்பொழிவுகள் 1965, இளைஞர் குல திலகம் 1966. தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி ஆசிரியர், சிந்தனையாளர் மன்றச் செயலாளர்.*

**லக்ஷ்மணன். ஈ. B. SC.**

*30, செக்ரடேரியட் காலனி, சென்னை-10.*

*பு. பெ: வாதூலன். பி: சென்னை, 17-10-1939. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: ஒரு கிளைப் பறவைகள் 1965 (சிறுகதைத் தொகுதி). எட்டு ஆண்டுகளாகச் சிறுகதை, நாவல், சிறுவர் இலக்கியம் எழுதிவருகிறார்.*

**லக்ஷ்மணன். எஸ்.**

*15, வெங்கடாசல நாய்க் தெரு, தண்டையார் பேட்டை, சென்னை-21.*

*பு. பெ: லெமன், லாக்ஷா, எஸ்ஸெல். பி: பாட்னு, 24-2-1933. அ. பி. மொ: ஆங்கிலம், ஹிந்தி. நூல்:*

விண்ணின் அழைப்பு 1956 (கவிதைத் தொகுப்பு). பத்தாண்டுகளாகச் சிறுகதை, கவிதை, சிறுவர் பாடல்கள் எழுதிவருகிறார். 'கண்ணன்' பத்திரிகையில் பணியாற்று கிறார்.

**லக்ஷ்மணன். கி.** M.A.

463, நாரன்பிட்டி ரோடு, கொழும்பு-5.

பி: பலாலி, யாழ்ப்பாணம், 16-5-1918. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: கம்பனது கதாபாத்திரங்கள் 1959, பாரதத் தூதுவர் 1959, இந்திய தத்துவ ஞானம் 1960. (சென்னை அரசினர் பரிசும் இலங்கை சாகித்ய மண்டலாயா பரிசும் பெற்றது).

**லக்ஷ்மணன். தி.** B. com;

5/5, வேனல்ஸ் ரோடு, சென்னை-8.

பு. பெ: திலக். பி: சென்னை, 16-12-1936. அ. பி. மொ: ஆங்கிலம். நூல்: நில், கவனி, புறப்படு. 1966 (கட்டுரை) ஐந்து ஆண்டுகளாக எழுதி வருகிறார். 'இளைய பாரதம்' (மாத இதழ்) ஆசிரியர்.

**லக்ஷ்மி கிருஷ்ணமூர்த்தி.** M.L.C.

14, தணிகாசலம் செட்டி ரோடு, சென்னை-17.

பி: பம்பாய், 25-7-1925. அ. பி. மொ: ஆங்கிலம், மலையாளம், ஹிந்தி. நூல்: ஐந்தாவது சுதந்திரம் (கட்டுரைத் தொகுப்பு). 1944 முதல் கட்டுரை, சிறுகதை எழுதி வருகிறார். 'வாசகர் வட்டம்' (BOOK VENTURE) ஆரம்பித்து நடத்தி வருபவர். தேசபக்தர் சத்தியமூர்த்தி அவர்களின் புதல்வியார்.

**லீலா. எஸ்.** B.A.

3/1, மேற்கு அரசமரம் தெரு, அமைந்தகரை, சென்னை-29.

பு. பெ: செல்வி. பி: கோழிக்கோடு, கேரளா மாவட்டம், 14-11-1942. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி, மலையாளம், தெலுங்கு. நூல்: உணர்ச்சியும் உருவமும் 1965 (சிறு கதைத் தொகுப்பு); பூங்கொத்து 1965 (சிறுவர் இலக்கியம்). வானொலியில் பல சிறு கதைகள், நாடகங்களை ஒலிபரப்பியவர். தமிழிலிருந்து ஆங்கிலம், மலையாளத்தில் மொழி பெயர்க்கவல்லவர். அகில இந்திய வானொலி நிலையத்தில் கடமை அதிகாரி.

**லெட்சுமிகாந்தன். சி. ரா.** D.R.S., B.ED.

ஆசிரியர், இராமசாமிச் செட்டியார் நகர உயர்நிலைப்பள்ளி, சிதம்பரம் (தெ. ஆ. மாவட்டம்).

பி: சிதம்பரம், 28-4-1940. அ. பி. மொ: ஆங்கிலம், இந்தி. நூல்: நல்வாழ்க்கை முத்துக்கள் 1965 (முதியோர்

